ஸ்ரீ

ராமஜயம்.

ஸ்ரீமகா

# பாரதவிலாசம்.

சூது - துகிலுரிதல்.

இஃது

மயிலம்

சுப்பிரமணியசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

சென்னை-இட்டா.

பார்த்தசாரதிநாயுடு

அவர்களது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1900.

நெ-1-திருப்பள்ளிசந்துபெத்துநாய்க்கன்பேட்டை.

மதராஸ்.





ஸ்ரீ

ராமஜெயம்,

# ஸ்ரீ மகாபாரதவிலாசம்.

## சூது - துகிலுரிதல்.

### விநாயகர்-தோத்திரம்,

வெண்பா-இ-ம்-சங்கராபரணம்.

ஓதுமகாபாரதத்தி லுள்ளபடிநாடகமாய்ச்
சூதுதுகிலுரியுஞ் சொல்லவே-ஆதரவாய்த்
தஞ்சமென்றிரங்குமெங்கள் தாம்வேழமாமுகனார்
கஞ்சமஞ்சுஞ்செஞ்சரணங் காப்பு.

### முருகர்-தோத்திரம்.

விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

சரவணபவனேபோற்றி சங்கரன்மகனேபோற்றி
அரிதிருமருகாபோற்றி ஆனைமாமுகனேபோற்றி
திருவளர்க்குகனேபோற்றி செங்கைவேலவனேபோற்றி
கரிமுகக்கிளையவெங்கள் கந்தனேபோற்றிபோற்றி

### சிவபிரான்-தோத்திரம்.

விருத்தம்-ஆனந்தபைரவி.

திங்கள்செஞ்சடையாய்போற்றி திரிபுரமெரித்தாய்போற்றி
மங்கையோர்பாகாபோற்றி மான்மழுதரித்தாய்போற்றி

துங்கவெள்விடையாய்போற்றி துலங்குமுக்கண்ணாபோற்றி
எங்கள்நாயகனேபோற்றி ஈசனேபோற்றிபோற்றி.

மகாவிஷ்ணு-தோத்திரம்.

விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

ஆரணப்பொருளேபோற்றி அகிலநாயகனேபோற்றி
பாரளந்தவனேபோற்றி பாண்டவர்தூதாபோற்றி
வாரணமழைத்தபோது வந்துகாத்தவனேபோற்றி
காரணவஸ்துவான கண்ணனேபோற்றிபோற்றி

உமையவளுக்கும்-இலட்சுமிக்கும்-சரஸ்வதிக்கும்

தோத்திரம்-விருத்தம்-இ-ம் காம்போதி,

திருவளருலகம்போற்றுஞ் சிவகாமித்தாயேபோற்றி
மருமலர்க்கமலமேவு மாதுலட்சுமியேபோற்றி
மருமலர்க்கலைகள்சொல்லி மகத்தானமதுரவாக்கு
தருஞ்சரஸ்வதியேயுந்தன் றாளிணைக்கமலம்போற்றி

தரு-தோடையம்-இ-ம்-ஆனந்தபைரவி-அடதாளசாப்பு.

விநாயகர்தோத்திரம்-தரு-இ-ம்-பைரவி.

நீதாசரணம் விநோதாசரணம்
ஆதாரமாங்கண நாதாசரணம்
தீதுமில்லாமலிந்தத்தமிழுக்குத்
திருவருள்செய்து தினங்காக்கவேணும்
சிவசங்கரி-யுலகங்களை-யுதவுந்தனி-யுலவுந்தருள் நீதா

சுப்பிரமணியா-தோத்திரம்.

துய்யாசரணமென் னையாசரணம்
மெய்யானவேல்முரு கையாசரணம்
ஓய்யாரமாமயி லேறிவந்தேயேழை
யுரைக்குந்தமிழ்க்குதவிசெய்யவேணும்
ஒருமாங்கனி-யதுகொண்டாடிட-வுலகந்தனை-வலம்வந்திடும்

பரமசிவன்-தோத்திரம்.

ஏகாசரணம் விவேகாசரணம்
வாகானதோகையர் பாகாசரணம்
பாகானவிந்தத் தமிழுக்குதவிசெய்யவேணும்
பாலிக்கவேணுங்கிருபை பாலிக்கவேணும்
பணியுந்திகழ்-மதியும்புன-லருகுந்தனை-சடைதங்கிய ஏகா

உமையவன்தோத்திரம்

மாலிகாசரணம் கபாலிசரணம்
சீலிவிசாலத் திரிசூலிசரணம்
நாலிலந்தனிலிந்த நாடகம்பாடவென்
னுவிலிருந்துநீ நன்மைதரவேணும்
நவகண்டமு-மதிரும்படி-நடனம்-பதபங்கய மாலி

விஷ்ணுதோத்திரம்,

நந்தாசரணு முகுந்தாசரணம் கோ
விந்தாசரணா விந்தாசரணம்
எந்தாயிதற்கொரு விக்கினமுமில்லாம
லின்னருள்தந்துநீ முன்னிற்கவேணும்
இடமங்கைய-ருடன்மங்கள-மடர்கின்றிடும் நந்

சரஸ்வதி-தோத்திரம்,

வாணிசரஞ்சொல் வேணிசரணமிந்தி
ராணிசேர்புத்தக ராணிசரணம்
வாணுதலானே சரஸ்வதியேயிந்த
வண்டமிழ்சொல்லநல் வாக்குத்தரவேணும்
மலர்தங்கிய-பிரமன்றிரு-வுளமிங்கிர்த-முடனேமகிழ் வாணி

தரு-இ-ம்-அசாவேரி-திரிபுடைதாளம்

பல்லவி.

மங்களஞ் செயமங்களம் சுபமங்களம்

அனுபல்லவி,

துங்கவிலம்பிறையுந் தங்குஞ்சடைமுடியும்
தேசுலாவநாகா பாணமுங்கொன்றையும்

வாசவுமெனு ஞானதிபனென்று
சித்தர்கள்தவ முத்தர்கள்தத்துவ
நித்தர்கள்பரி சுத்தர்கள்பரவிய
திரகயிலாச மெய்யோர்க்கும்
மலைமகளெனுமா உமையாட்கும் மங்க

சரணங்கள்.

செகமேல்வாருமையா பணைத்துங்
தவராமல்வகைஞான மளிக்கும்
மருதேசிகனாக விருக்கும்
குருநாதன்செவ்வேள் முருகர்க்கும்
திருபிறைநுதல்குற மகவள்ளிக்குஞ்
சுராபதிதருமகள் தெய்வானைக்கும்
திசைமுகனுக்குங் கலைமகளுக்குக்
திருமகளுக்கும் முயல்வண்ணனுக்கும்
சீருலாவுசூதாடல் துகிலுரிதலைப்
பேருலாவுகன் னாடகமுறைசெய்த
செந்தமிழ்க்கவிராமச் சந்திரன்றனக்குஞ்
சந்தமாய்ப்பாட மனங்கொண்டவர்க்கும் மங்க

விநாயகர்வரும்-பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

அந்தமுமாதியாகி யருமறைப்பொருளுமாகி
விந்துவுநாதமாகி மெய்ப்பொருடானேயாகும்
இந்துவேணியனளித்த விறைபொருமுதல்வனான
கந்தமாமலர்த்தாள்திவ்ய கணபதிவருகின்றாரே

விநாயகர்வருகிற-தரு-இ-ம்-பூரிகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

தர்மவிநாயகர் தாமிதோவந்தார்-அருள்புரிந்திட
தர்மவிநாயகர் தாமிதோவந்தார்

நன்மைசேர்முத்தியாலுப்பேட்டையில்
வன்னியவீதியில் வந்துகுடிகொண்ட
வல்லப்பைப்பெண் மணவாளாநல்ல
கல்விதருங்கிருபை யாளாஎழில்
வாரணகத்தினில்-மேவுமுக்கிய-தேவருக்குமே-யாவர்க்குநல்
வளமிகும்வல்ல கலையின்றிட
வுளமிதங்கிநன் னருசாந்திமேதா நர்ம

சரணங்கள்.

மங்கையுமையருளங்குச பர்சா-கருணைவிலாசர்
மல்லன்வருகுழல் வல்லபப்பிராணேசா
தங்கும்பலகலைதந்தருளுநேசா கோடிசூரியப்பிரகாசா
தஞ்சமென்றேடிட நெஞ்சந்தனில்வாசர்
பொங்கஜமுஞ்சூரனை வாட்டிய
பூரணவெற்றியினிற்பாரதந் தீட்டிய
ஐங்கரனேநல்லமுதுசெய் தூட்டிய
ஒளவைக்குக்கைலாயத்தைக் காட்டிய

ஆகமெய்ச்சதுர் வேகமெய்ப்பொரு
ளாயிருப்பவர் தூய்சிறப்பவர்
அங்குமிருப்பவர் இங்குமிருப்பவ
ரானைமுகத்தவர் மோனமிகுத்தவர்



கட்டியக்காரன்-வருகிற-பொதுவிருத்தம்

இ-ம்-சங்கராபரணம்.

மட்டில்லாகீர்த்திபெற்ற மதிகுலக்கொழுந்தோங்கி
அட்டதிக்கெல்லாங்கார்க்கு பட்டல்பெறுமாசர்கோமன்
துஷ்டரைக்காக்கும்வீரன் துரியன்மகாராசன்வாசற்
கட்டியக்காரன்வந்து கவரியிற்றோன்றினனே

கட்டியக்காரன்-வருகிற-தரு-இ-ம்-மிசுரதாளம்.

பல்லவி.

வாசற்கட்டியக்காரன்வந்தான்
ராஜன் துரியோதன ராசகெம்பீர வாச

அநுபல்லவி.

தலையிற்பொன்னுருமாலை துலங்க-கையிற்
சமுதாடுபளபளவென் றிலங்கவாரு
வலங்களிருதோளில் தரித்து-சரிகை
வஸ்திரம்வல்லவாட்டு விரித்து. வாசற்க

சரணங்கள்.

வலுவாய்சல்லடத்தட்டி வரிசையாய்கச்சைகட்டி
வலதுங்கமீசை முறுக்கிவந்த
மறுமன்னர்பயப்பட வுருக்கி

மருமண்டலாதி பதிகள்வந்தெதி ரடிபணிந்திடவிறன்மிகுத்துள
மதிகுலந்தன்னில் வருதுரந்தர துரியனென்றிடு மகிபன்வந்திடு
சமயமிதுவெருசமயமிது வெனசபையிலனைவரும்புகழஇதமுளவாச

வ-ம் அகோதெப்படியென்றால் ஏகச்சக்ராதிபதியானசந்திரவம்ச உத்தாரகனை இராஜபயங்கர ராஜகெம்பீர ராஜமார்த்தாண்ட ராஜ மகேந்திர ராஜாதிராஜனான துரியோதனமகாராஜன் கொலுவுக்கு வருகிறபடியால் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் காலதேசத்துராஜாக்களெல்லோரு எச்சரிக்கை ஆடாதகொலுவாசற்காரரே சீக்கிரமாய்கொலுவை அலங்காரம் பண்ணும் பிள்ளாய்.

## பொதுவிருத்தம்.

ஒலிகடல்சூழுகின்ற உலகமெலாமொருகுடைக்கீழ்
இலகும்படியாள்வல்ல ராஜாதிராஜனான
வலுமையில்மிகுந்தவீரன் மகாதுரியோதனன்றன்
குலவியவெழில்மிக்க கொலுவுக்குவருகின்றானே.

(வ-ம்) அதேதெப்படியென்றால் பாண்டவர்கள்செய்த இராஜசூயயாகத்திற்குதுரியோதனாதிகள்போயிருந்தபடியினாலே அவர்களிடத்திலேநடந்த சிறப்புகளனைத்தையும் துரியோதனமகாராசன் பார்த்து பொறாமையினாலேமனந்தளர்ந்து அஸ்தினாபுரம்வந்துசேர்ந்து எந்தவிதத்திலேயும் பாண்டவர்களைமோசஞ்செய்து அவர்களுக்குக்கொடுத்தஇராச்சியத்தையும் செல்வத்தையும் பறிக்கவேணுமென்று ஆலோசனைசெய்யும்படியாய் துரியோதனமகாராசன் கொலுவுக்குவருகிறவிதங்காண்க.



துரியோதனாதிகள்-வருகிற தரு- இ-ம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி.

இராஜாதிராஜன் மகாராஜன் — துரியோதிரன்
இராஜமார்த்தாண்டவன் வருதான். — கொலுவிருக்க

அநுபல்லவி.

பேசும்வீஷ்மன்விதுரன்சகுனிகர்ணன் துற்சாதனன்
மாசிலாத்துரோணர்கிருபன் அஸ்வத்தாமன்பெய்ப்பாய்வர — இரா

சரணங்கள்:

ஏசபூச்சக்கிரக்குடை கவிக்க
    எதிரெதிர்மன்னர்கரங் குவிக்க
வாகையரவக்கொடி பிடிக்க
    தைரியர்வெற்றிகளைப் பிடிக்க
தோகையர்வெண்சாமரம் வீச
    சொற்கடிதையாதிகளைப் பேச
மோனமாதரால மேந்த
    மொய்குழலார்காளாஞ்சி யேந்த
போகதேவேந்திர னென்ன
    போகராசேந்திர னென்ன
பூரிகைபேரிகை நாகசுராதிகள்
    நீடியவார்கடல்போலொளிபிரவே
அந்தரமின்றெதிர்கந்தர மென்றிட
    முந்தியதுந்துமி யென்றிட
பம்பையதிர்ந்திடசங்கு முழங்கிட
    இங்கிர்தமுடன்மங்களகரமுடன் இராஜாதி

## கட்டியக்காரன்-எச்சரிக்கை

### ஆசிரியவிருத்தம்.

மணிமகுடமன்னவர்களிருபுரநெருங்கவே
    மருமலர்வணங்கிவரவே
வயிரியர்கள்விருதுகள்படிக்கவேவிலைமாதர்
    வரிசைநடனம்புரியவே
அணிகொண்டகுதிரைப்பெரும்படைநெருங்கவே
    ஆனையின்றிரள்சூழவே
அமைச்சர்களிணங்கவே பிரதானிசேனுபதிக
    ளங்கங்குனிந்துவரவே
பணிவிடைக்காரருந் திருவடிவணங்கவே
    பார்த்திபர்வணங்கிவரவே
பாவையர்கள்வெண்சாமரங்கள்தனைவீசவே
    பம்பைதுந்துமிகுமுரவே
திணிகொண்டநவரத்தின சிம்மாசனக்கொலுவில்
    சிருடனேயரசுசெய்ய
தீரன்திரியோதனமகாராசர்வருகிறார்
    ஜெனங்களேஎச்சரிக்கை

மருவென்னமாமனென்ன வஞ்சனைவிஷங்களெல்லா
பருவமில்லாதவார்த்தைபார்த்திபன்முன்னேசொன்னாய்

(வ-ம்) கேளுந்துற்சாதனமகாராசனே இந்தஒருகணையினால்பாண்டவர்களை கருவறுத்துப்போட சமர்த்தனுனகர்னனிங்கேயிருக்க வஞ்சனையினுலும் விஷத்தினுலும் உபாயகாபனையினுலும் கொல்லவேமென்று உபசாரமில்லாதவார்த்தையை இந்தஇராசசபையிலேபேசலாமோ துற்சாதனமகாராசனே.

சகுனி-கர்னனுக்குச்சொல்-விருத்தம்.

மைக்கண் துரோபதைக்காயன்று வளைத்தவில்லடிபட்டங்கே
மிக்கதோர்சலித்துப்பாரில் வீழ்ந்ததுமறந்திட்டாயோ
அக்கணம்விஜயன்செய்த ஆண்மையைப்பார்த்திருந்து
வெட்கமில்லாமல்கர்ணா வீண்பேச்சுபேசலாமோ.

(வ-ம்) கேளுங்கர்னமகாராசனே ஒருதுரோபதைக்காக வில்லைவளைக்கப்போம்போது அந்தவில்லினாலே அடிபட்டுகீழேவிழுந்து உதைத்துக்கொண்டது மறந்துவிட்டையா அந்தட்சணத்திலே அர்ச்சுனராசன் தன்னுடையதிராணியைச்செலுத்தினதைப் பார்த்திருந்தும் வீண்பேச்சைபேசலாமோ கானமகாராசனே.

சகுனி-திரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

தப்புறுபாண்டவாளை சண்டையால்வெல்லநம்மால்
இப்பிறப்பிலுமாகாது யெழுபிறப்பிலுமாகாது
துப்புறுகபடவஞ்ச சூதினால்வெல்லலாகும்
ஒப்புரவிதல்லாமலொன்றுலும்வெல்லமாட்டோம்

(வ-ம்) கேளும் என்னுடைமருமகனுன துரியோதனமகாராசனே அந்தப்பாண்டவாளைச்சண்டைசெய்துவெல்லநம்மாலே இப்பிறப்பிலுமாகாது இன்னமிப்படியேழுபிறப்புபிறந்தாலும் வெல்லக்கூடாது வஞ்சனைபண்ணி சூதினாலே வெல்லலாமேயல்லாமல் மற்றபடி ஒன்றுலும் வெல்லமாட்டோம் என்னுடைய மருமகனுன துரியோதன மகாராசனே.

துரியோதனன்-சகுனிக்குச்சொல்-விருத்தம்

ஆமாமாமெய்தான் அப்படிதானேசெய்வோம்
மாமாசொன்னதுவேபுத்தி மாமாவென்னருகேவரும்
ஏமாந்திருதினாலே யெப்படிவெல்வோமந்தச்
சாமார்த்தியமின்னதென்று சட்டமாயுரைசெய்வீரே.

(வ-ம்) ஆ ஆ ஆ ஆ-அதுவேசரி அதுவேசரி தகும் தகும் அதுவே புத்தியாமாமா என்னருகேவாரும் சூதாடி வெல்வோமென்று சொ

ன்னீரல்லவா அந்தவுபாயத்தை நன்றாய்த்தெரியச்சொல்லவேணும் என்மாமாவே.

சகுனி-திரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

மண்டபமொன்றுசெய்து மற்றந்தமண்டபத்தை
கண்டிடவரவழைத்துக் காண்பித்துப்பொழுதுபோக்கி
அண்டியேசொக்கட்டானை யாடுதற்கிசையச்செய்து
வண்டிறலைவர்தங்கள் வாழ்வெலாங்கெலித்துத்தாரேன்

(வ-ம்)கேளுமென்னுடைசமருமகனை துரியோதனமகாராசனேபுதிதாய் ஒருஅலங்கார மண்டபஞ்செய்து அதைப்பார்க்கும்படியாய் பாண்டவர்களையழைப்பித்து அதைகாண்பித்துப்போசனஞ்செய்த பின்பு பொழுதுபோகவேண்டுமென்று சொக்கட்டானுடச்செய்து பாண்டவர்களைத்தோற்கடித்து அவர்கள்சேனைநாடுநகரம் பண்டபண்டாரங்களையெல்லாமுனக்கேகளாகும்படியாகக்கெலித்துதருகிறேன் என்சாமர்த்தியத்தைப்பாரும் மருமகனே.

பொது விருத்தம்.

வெற்றிசேர்கர்னன்சொல்லும் வினவியதம்பிசொல்லும்
மற்றவர்சொன்னசொல்லும் மறுத்ததன்மாமன்சொன்ன
குற்றமாஞ்சகுனிசொல்லை குருமொழியாகவெண்ணி
கொற்றவனதுரியனுடைசை கொள்ளுவான்துள்ளுவானே.

திரியோதனன் சகுனிக்குச்சொல் தரு.

இ-ம்-கண்டா-அடதாளச்சாப்பு.

கண்ணிகள்.

உன்னாலேயல்லவோ நானுலகத்தையாளுவது சகுனிமாமா
உன்னையல்லாலெனக்குற்ற துணையுண்டோ சகுனிமாமா
என்னாலேயாகுமோ யிந்த மோசஞ்செய்ய சகுனிமாமாநான்
எண்ணின எண்ணத்தை நடத்திவைப்பாயே சகுனிமாமா
சமயத்துக்கேற்றதருவெடுத்துச்சொன்னாய் சகுனிமாமா
தந்திர இந்திரசாலமென்னவேசொல்வார் சகுனிமாமா
நம்மைப்போல்பாண்டவர்நாடாளலாச்சுதே சகுனிமாமா
நாடுநகரமுநாமாளவேணும் சகுனிமாமாநாம்
சிங்காரமாயாகஞ்செய்தழைப்பித்தாலே சகுனிமாமா
செல்வமாய்கூடிக்கொண்டெல்லோரும்போமேனும் சகுனிமாமா
பாஞ்சாலியையும் [illegible] சகுனிமாமாநம்மை

பத்திற்பதினென்றாய்ப்பார்த்திருந்தார்களே சகுனிமாமா
துவண்டியபாண்டவர்சின்னஞ்செய்தார்களே சகுனிமாமா அந்த
துற்சனருக்கிப்போதுனாததனம்வந்ததே சகுனிமாமா
மன்னவனென்றெண்ணிமதியாமற்போனாரே சகுனிமாமா என்னை
பரியாசைசெய்துவணங்காதிருந்தாரே சகுனிமாமா
பஞ்சவரொளிதப்பண்ணதும்போதாமல் சகுனிமாமா அந்த
பட்டி துரோபதைஎன்னைப்பார்த்துநகைத்தாளே சகுனிமாமா
கொஞ்சமாயெண்ணிக்குலுங்கநகைத்தாளே சகுனிமாமா அந்த
சுக்கச்சிறுக்கியென் வெட்கங்கெடுத்தாளே சகுனிமாமா
நீலிப்பழிக்கநிலத்திலிருந்தேனே சகுனிமாமா அதை
நினைக்கநினைக்கநெருப்பாயெரியுதே சகுனிமாமா
வேலிக்குமுட்போட காலுக்குதைத்ததே சகுனிமாமா அந்த
வெஞ்சினந்தீர்த்திடவேளைகிடைத்ததே சகுனிமாமா
எத்துகளுஞ்சூதுவித்தைகளுங்கற்ற சகுனிமாமா என்னை
எப்படியாகிலுமீடேற்றவேண்டுமென் சகுனிமாமா
குத்திசைபாண்டவர்குடியைக்கெடுத்தலென் சகுனிமாமா உன்னை
குலதெய்வமாய்வைத்துக்கும்பிட்டிருப்பேனன் சகுனிமாமா
சொக்கட்டான்பாண்டவர் தோத்திடச்செய்தால் சகுனிமாமா உனை
துரையாகவைத்துநான்சொன்னபடிகேட்பேன் சகுனிமாமா
கைக்குக்கண்ணாடியென்கண்ணுக்குகண்ணே என் சகுனிமாமா என்னை
காத்தாலும்நீர்கரைசேர்த்தாலும்நீயேயென் சகுனிமாமா

## பொது விருத்தம்.

இப்படிதன்மனத்தி லிருந்திடமபொறுமையெல்லா
ஒப்புடன் துரியன்சொல்ல உளமதுமகிழ்ந்துகேட்டு
தப்புறுசகுனிமுன்னே சாற்றியமந்திரத்தை
துப்புறவெவருங்கேட்கச்சொல்லுவான்சொல்லுவானே

## சகுனி-திரியோதனனுக்குச்சொல்விருத்தம்.

மண்டபமொன்றுண்டாக்கி
வரவழைத்துக்காண்பித்துமகிழப்பேசி
உண்டுமுதலானபின்புபொழுதுபோக
வொருதரஞ்சூதாடவென்றுரைத்தோமானால்
தண்டிவரும்தர்மனும்பின்வாங்கமாட்டான்
சபைதனிற்சூதாடுதற்குச்சம்மதிப்பான்
வண்டிலனலாடிப்போதென்சமர்த்தால்
வாழ்வையெல்லாமவர்தோக்கவைசெய்வேனே.

(வ-ம்) கேளும் என்னுடைய மருமகனான துரியோதனமகாராசனே நான்சொன்னபடி ஒருசபாமண்டபமுண்டாக்கினீரேயானால் அதனைக்காணும்படியாய் பாண்டவாளையழைப்பித்து போசனாதிகள் செய்தபின்புபொழுதுபோகவேண்டுமென்று ஒருஆட்டம்சொக்கட்டானாடவேண்டுமென்றால் தருமராஜனுமே சம்மதிப்பான் அப்போதுபந்தயம்வைத்தாடுங்காலத்திலே அவர்கள்நாடுநகரம் ஆனைசேனைபண்டுபண்டாரம் சொக்கரோசனை இதுமுதலாகியவெல்லாம்உனக்கேவரும்படியாய் கெலித்துத்தருகிறேன்பாரும்என்சமர்த்தை துரியோதனமகாராசனே.

துரியோதனன் விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

மிகுதிரள்சிறியதந்தை விதுரனேநின்றன்போற்றி
சகுனியென்மாமன்சொன்ன தந்திரவுபாயத்தாலே
நகம்புகழவர்நாடு நகரமுநானேகொள்ள
தகுந்தகுமிதுவுமக்குச் சம்மதிதானோசொல்வீர்.

(வ-ம்) சரணம்சரணம் விதுரமகாராஜனே யெனதுமாமனார்சகுனி சொன்னவுபாயத்தினாலே பாண்டவர்களுடையசெல்வத்தைநானே யனுபவிக்கப்போகிறதுபோல்தோணுது அதுஉனக்குச் சம்மதிதா னோதெரியச்சொல்லுமையா.

விதுரன் திரியோதனனுக்குச்சொல் விருத்தம்.

பாதிநாடளித்தபின்பு பறித்திடநினைத்துவஞ்ச
சூதினால்வெல்வோமென்று சொல்வதுதருமந்தானோ
நீதியோநெறியோ நீசொல்லுங்கொடியவார்த்தை
காதிலுங்கேட்கலாமோ கனவிலுநினைக்கலாமோ.

(வ-ம்) கேளுமையா திரியோதனமகாராசனே பாண்டவர்களுக்கு பாதிநாடுகொடுத்தோமே இப்போதவர்களை இங்கேயழைப்பித்து க்கபடமார்க்கமான சொக்கட்டானுடச்செய்துமறுபடியும் அவர்களுக்குக்கொடுத்துவிட்டநாட்டை அபகரித்துக்கொள்ளுகிறதுதருமமா இதுநீதியா அரி அரி இவ்வார்த்தையை காதிலுங்கேட்கப்போகாது கனவிலும்நினைக்கப்போகாது திரியோதனா.

திரியோதனன் விதுரனுக்குச்சொல் விருத்தம்.

தீதாகவெனதுவாழ்வுஞ் சிறப்பையுங்கொடுத்துநாங்கள்
மீதாகநினைக்குந்துஷ்ட விரோதிக்குக்கொடுத்தநாட்டை
வாதாடிப்பறித்துக்கொள்ள மனுநீதியிருக்கமேலும்
சூதாடிபறித்துக்கொண்டால் தோஷமென்றுரைக்கலாமோ.

வசனம்.

ஆகா ஆகா நன்றாய்ச்சொன்னீர் பிழைக்கப் போகட்டுமென்று பாதிநாட்டைக்கொடுத்தால் அதைவைத்துக்கொண்டு அடக்கமாயிராமல் ஒருவராலுஞ் செய்யப்போகாத இராசசூயயாகஞ் செய்யலாமா ஒருபெண்ணாய்ப்பிறந்தவள் விரலத்தனை சிறிக்கி அந்தத்திரௌபதை என்னைப்பார்த்து நகைக்கலாமோ நான்போனாலும்மரியாதை செய்யாமலிருக்கலாமா அப்படிப்பட்ட துஷ்டருக்குக்கொடுத்தநாட்டை அடித்துப்பறித்துக்கொள்ளவேண்டும அப்படிச்செய்யாமல் சொக்கட்டாலடிப்பறித்துக்கொண்டால் இது அதர்மமா பளாபளா நன்றாச்சு

விதுரன் - துரியோதனனுக்குச்சொல் - விருத்தம்

களவானசூதுவேண்டாம கருதிநாம்கொடுத்தநாட்டை
தாவேணுமெனக்கென்றுந்தன் தகப்பன்கையோலைபோனால்
பரிவாகநாட்டைவிட்டு பாண்டவர்வனம்போவார்கள்
உரவாருவுலகுநீயே யொருமிக்கயாள்வாயப்பா

வசனம்.

கேளுமப்பா துரியோதனா சொக்கட்டாலடி உபாயமாய் நாட்டைப்பறித்துக்கொள்ளவேணுமென்றுதேவையில்லை நாம்கொடுத்தநாட்டை மறுபடியுங்கொடுத்து விடச்சொல்லி உன்தகப்பன் கையோலைபோனால் சந்தோஷமாகத்தானே நாடுநகரத்தையுங்கொடுத்துவிட்டு பாண்டவர்கள் காட்டுக்குப்போய்விடுவார்கள் அப்பால்நீயே இந்தவுலகத்தையாளலாம் மற்றபடி சூதாடிப்பறித்துக்கொள்ளுகிறது தருமமல்ல துரியோதனா.

திரியோதிரன் - விதுரனுக்குச்சொல் - விருத்தம்,

வாயலில்மரத்தைவைத்து வளர்ந்திடமரம்வளர்ந்து
போவுந்தெருவிற்போகும் போக்கருநிழல்தந்தாப்போல்
வாசமும்வாழ்வுமன்ன வஸ்திரமெல்லாமிங்கே
ஆசையுமன்புமங்கே யாகில்நீயதுவேசொல்வாய்

வசனம்.

கேளும் சிற்றப்பா வாசலில்நிழலிருக்க வேணுமென்று மரத்தைவைத்துதண்ணீர்வார்த்துவளர்த்தால் மரமுழுவதும்வளர்ந்துவளைத்து தெருவிற்போகிறபேர்க்கு நிழல்கொடுத்தாப்போலிருக்கிறது உன்னுடையநடத்தை அதெப்படியென்றால் உனக்கு அன்னமும் வஸ்திரமுமிங்கே ஆசையுமன்புமங்கே பாண்டவர்கள்பேரிலே அப்படியானால் இதுமாத்திரம்சொல்லுவாய் இன்னமும் அனேகஞ்சொல்லுவாய்.

விதுரன்-திரியோதிரனுக்குச்சொல்-விருத்தம்,

உற்றதுஞ்சொன்னேனீங்க ளொருவருக்கொருவர்நெஞ்சில்
பற்றியேபகையைக்கொண்டால் பாரில்மன்னவர்நகைப்பார்
மற்றுமுன்மொழிதடுத்து வஞ்சனைசொன்னேனென்று
குற்றமென்மேற்சொன்னாற் கூறுவதினிவேறுமுண்டோ

வசனம்.

கேளுமப்பா துரியோதனா பாண்டவர்களும்நீங்களும் ஒருவருக்கொருவர் சண்டைசச்சரவுபோட்டால் மற்றராசாக்க ளெல்லாம் பழிப்பார்கள் நடக்கிறகாரியத்தைசொன்னால் சொன்னசொல்லுங் கேளாமல் வஞ்சனையாகச்சொன்னேனென்றுசொன்னால் இனிநான் வேறென்னசொல்லப்போகிறேன் துரியோதனா.

திரியோதிரன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

துன்னியகபடுஞ்சூதுந் துற்புத்தி அதர்மமெல்லாம்
என்னிடத்தினிலேதானே யிருக்குதுமெய்தான்மெய்தான்
சொன்னசொல்மறுத்துவிட்ட துஷ்டனானகையாலே
பொன்னடிக்கமலம்போற்றி பொருத்துக்கொண்டேகுவீரே

வசனம்

அப்பா சிற்றப்பா அந்தமட்டிலேபோதும் என்னிடத்திலேகபடுஞ்சூதும் துற்புத்தியும்அதர்மமுங் கூடிக்கொண்டிருக்கிறது பெரியோர்கள்சொல்லப்பட்டவார்த்தைதள்ளிவிடப்பட்ட துஷ்டனுமாயிருக்கிறதுஆகையால் என்குற்றத்தையெல்லாம் பொறுத்துக்கொள்ளவேண்டும் சரணம்சரணம் எழுந்திரும்போய்வாரும்.

விதுரன்-திரியோதிரனுக்குச்சொல்-விருத்தம்.

ஆன்றோருன்குடிக்கு அஷ்டமச்சனிபோல்வந்து
தோன்றியசகுனிமாமன் துற்புத்தியாலேயுந்தன்
உன்றன்னகரம்வாழ்வு மிகந்திடக்காலம்வந்தால்
ஊன்றியபெரியோர்வார்த்தை யுரைக்குமோவுரைத்திடாதே

வசனம்.

அடா துரியோதனா உன்னுடையகுடிக்கு அஷ்டமச்சனிபோல் வந்துவாய்த்தசகுனியுடைய துற்புத்தியினாலே உன்னுடைய செங்கோலும்வாழ்வும் இழந்துபோகிறதற்குகாலம்வந்துநேர்ந்ததானால்நல்லோர்கள்வார்த்தை உன்செவிக்கு கேற்குமா வற்காது மற்றதெல்லாம் அனுபவிக்கவேணும் துரியோதனா

பொது-விருத்தம்.

விதுரனுங்கோனைவிட்டு வெகுண்டுமேபோனபின்பு
சதிர்முடிவேந்தன்றானுங் கபடுசெய்யசகுனிதானுஞ்

சதிசெய்யுந்தம்பிதுற்சாதனனுமற்றெவருங்கூடி
நிதிதருமண்டபத்தை நிர்மிக்கத்தொடங்கினரே

திரியோதிரன் - துற்சாதனனுக்குச்சொல் - விருத்தம்.

தம்பிதுற்சாதனனே தாமிஷமாயிராமல்
தமபிதச்சித்திரசிற்பன் கனவிசித்திரமுந்தோய்ந்த
உம்பருமகிழத்தக்க வொருசிற்பாசாரிதன்னை
நம்மிடகொலுவிற்கிப்போ களிமையாயழைப்பிப்பாயே

வசனம்.

அடா தம்பி துற்சாதனா இப்போதாமிஷமாயிராமல்சிற்பசாஸ்திரமெல்லாம் நன்றாய்க்கரைகண்டவனாக ஒருசிற்ப சாஸ்திரியைய ழைப்பியும் தம்பிதுற்சாதனா

துற்சாதனன்சொல் - வசனம்

அப்படியே அழைப்பிக்கிறேன் அண்ணாவே

துற்சாதனன் - சேர்வைக்குச்சொல் - விருத்தம்

ஆரடா சேர்வைக்காரா அதிசீக்கிரமாகவோடி
பாரடா புகழைப்பெற்ற பார்த்திபனழைத்தானென்று
சாரமாஞ்சொந்தசிற்பா சாரியையிட்சணத்தில்
சீருடன்கொலுவுக்கிப்போ சீக்கிரமாய்வரச்சொல்வாயே

வசனம்.

ஆரடா சேர்வைக்காரா ராசாதிராசனான திரியோதன மகாராசனழைத்தானென்று நம்முடையசிற்பாசாரியை இக்ஷணங் கொலுவுக்கு வரச்செய்யும்பிள்ளாய் சேர்வைக்காரா

சேர்வைக்காரன் - வசனம்

அப்படியே வரச்செய்கிறேன் சுவாமி

சேர்வைக்காரன் - சேவகனுக்குச் சொல் - கவி.

மற்புயவீரா சிற்பனையிப்போ
ஒப்புடனழைத்துக் கொப்பனவாடா

வசனம்.

ஆரடா சேவகா சிற்பாசாஸ்திரியை அதிசீக்கிரத்தில் அழைத்துவாடா

பொது - விருத்தம்

விசித்திரமுந்நூலும்பூண்டு விபூதியட்சதையுமிட்டு
துதித்தசீர்காவிச்சேலமன் சொகுசுடனுடுத்திநன்றாய்
மதித்திடுஞ்சிற்பநூலு மட்டறப்பலகையேந்தி
கதித்திடும்சடையில்வில்வ கர்மனும்வருகின்றானே

கட்டியக்காரன்சொல்-வசனம்

: அகோதெப்படியென்றால் இராசாதிராஜனான திரியோதனமகாராசன் கொலுவுக்கு சிற்பசாஸ்திரி வருகிறவிதங்காண்க



விஸ்வகர்மன்-வருகிற-தரு-சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி

இசையும்பாரிலெட்டுந் திசையுங்கீர்த்திபெற்ற

சரணங்கள்.

வேதியரெல்லோரும் செய்கின்றதொழில்களும்
வேள்வியு மென்றாலே
மேதினியாள்கின்ற வேந்தர்கைசெங்கோல்
விளங்குவ தென்றாலே
தீதில்லாகாருவைசியர்செய்யுஞ்
சீவன் மென்றாலே
திரமானசூத்திரர்யாவரும்போற்றிடும்
செல்வ மென்றாலே
பூதலமீதில்தேவாலய மானதும்
புனல்சேர்தடாகப்பிரதிஷ்டைக ளானதும்
சோதிடகருமருடமாளிகை யானதும்
சூட்சாதிசூட்சதுரைகளுதன் டானதும்
ஈதெல்லா மென்றாலேஉலகம்
ஈரேழு மென்றாலே
தாதவிழ்மாலைகுருகுலபாண்டவர்
தப்பிப்பிழைத்திட்டதந்திர மென்றாலே

ஆதலாலுள்ளதுஞ்சொன்னேன்சொன்னேன்காணும்
ஓதினேன்பொய்யல்லவுற்றுப்பார்க்கவேணும் விஸ்வக

சிற்பன்-திரியோதனனுக்குப்போற்றிவிருத்தம்

மன்னர்கள்மன்னுபோற்றி மகுடாபிஷேகாபோற்றி
கனவல்வில்மகனுபோற்றி கண்டகாமிண்டாபோற்றி
பொனணிமார்பாபோற்றி பூச்சக்கிரவர்த்திபோற்றி
எனையிங்கழைத்தசேதி யியம்புவீர்போற்றிபோற்றி

வசனம்.

சரணம்சரணம் இராஜமார்த்தாண்ட இராஜவுத்தண்ட ராஜகெம்பீர தேவரீரடியேனை யழைப்பித்தகாரியம் அருளிச் செய்யவேணும்சுவாமி,

திரியோதிரன்-சிற்பாசாஸ்திரிக்குச்சொல்-விருத்தம்

சிற்பனேகேளாய்நல்ல சித்திரவிசித்திரமாக
அற்புதமாகயாரு மதிசயப்படுவதாக
உற்பனமண்டபந்தா னென்றிற்கெசெய்யவேண்டு
விற்பனமாகச்செய்தால் வெகுமதிசெய்வேன்பின்னாய்

வசனம்.

வாரும்சிற்பாசாஸ்திரி இங்கேமகாஉன்னதமாகஒருசபாமண்டபஞ்செய்யவேண்டும் அந்தப்படிசெய்தா லுனக்கு நல்ல வெகுமதிகள்செய்வேன்பின்னாய்

சிற்பாசாரி-திரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

மூவருமெச்சமற்ற முனிவருமெச்சவானிற்
மேதவருமெச்சவெங்கள் தேவரீர்நீருமெச்ச
யாவருமெச்சநல்ல வெழில்மண்டபத்தைச்செயவேன்
தாவருமெனதுசிற்ப சமர்த்தைநீர்பாருஞ்சுவாமி

வசனம்.

கேளுஞ்சுவாமி மும்மூர்த்திகளும்முனிவர்களுந் தேவர்களும் மற்றவர்களும் தானகளுமெச்சும்படியாய்ச் சபாமண்டபஞ் செய்கிறே னென்னுடையசாமார்த்தியத்தைப் பாருஞ்சுவாமி

திரியோதிரன்-துற்சாதனனுக்குச்சொல்-விருத்தம்.

அருமைதுற்சாதனுகே ளாசாரிமனதுக்கேற்ற
மருவியவெள்ளிபொன்னு மாணிக்கமுதலாயுள்ள
பெருநவரத்தினங்கள் பின்னுமேவணதுகளெல்லாம்
ஒருகுறைவந்திடாம லொருமிக்ககொடுத்திடாயே

துற்சாதனன்சொல்-வசனம்

அப்படியே கொடுக்கிறேன் அண்ணுவே

சிற்பாசாரி-மண்டபஞ்செய்துவந்துசொல்-விருத்தம்.

செவ்வையாயுலகுசெங்கோல் செலுத்தியமன்னுமன்னு
ருவ்விதயுலகுமெச்ச முழுநவரத்தினத்தால்

ஒவ்வியசித்திரமாக உத்தமிகவேவல்ல
திவ்வியமண்டபந்தான் செய்திதோமுடிந்ததைபா

வசனம்.

கேளும் இருதிராஜபரமேஸ்வர தேவரீருக்காரப்படிக்குமகா உன்னதமாக சபாமண்டபஞ்செய்து முடிந்ததுசுவாமி

திரியோதனன்-சகுனிமுதலானவர்களுக்குச்சொல்விருத்தம்

௧ தந்திரசகுனிமாம தம்பிதுற்சாதனரும்
சுந்தரகர்ண வீஷ்ம துரோணரேசொலலக்கேளீர்
விந்தையாய்ச்செய்தவர்க்க விப்புருமண்டபத்தை
புந்தியில்மகிழ்ச்சிகொள்ளப் போயுடன்பார்ப்போம்வாரீர்

வசனம்,

கேளும்என்சகுனிமாமா தம்பிதுற்சாதனா கர்ணராஜனே வீஷ்மரே துரோணாச்சாரியரே நாமெல்லோருஞ் சிற்பசாஸ்திரி செய்த மண்டபத்தைப்போய்ப்பார்ப்போம் வாரீர் சபையோர்களே.

சபையோர்-வசனம்

அப்படியேபோவோம் திரியோதனமகாராசனே

திரியோதனன்-ஓடி-தரு-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்

பல்லவி

அதிசயத்தைப்பாரும்பாரும் இந்த அதிசயத்தைப்பாரும்பாரும்

சரணங்கள்.

| | |
|---|---|
| சகுனிமாமாயிங்கே | வாரும்-சிற்ப |
| சாஸ்திரசெய்ததைப் | பாரும் |
| பளிங்கினாற்றாணுக | ளமைத்தான்-மேலே |
| பவளக்காற்பொதிகை | வைத்தான் |
| இளங்கிளிபச்சையாய் | செய்தான் அதி |
| னிடைக்கிடைதங்கத்தைப் | பெய்தான் |
| வச்சிரக்கொடுக்கையைச் | சேர்த்தான்-அதின் |
| வரம்பெல்லாபொன்னீரை | வார்த்தான் |
| உச்சிதபச்சையை | நுழைத்தான்-அதின் |
| ஞோமெல்லாமிரத்ன | மிழைத்தான் |
| கொத்துச்சித்திரவேலை | யடித்தான்-நான் |
| குறித்தபடியே | முடித்தான் |
| இத்தனைமெத்த | தொல்லை-நான் |
| யிதைப்போலெங்கும்பார்த்த | தில்லை-அதிசய |

திரியோதனன்-சகுனிக்குச்சொல்-விருத்தம்.

சகுனியென்மாமாசிற்பசாஸ்திரிகெட்டிக்காரன்
புகலும்நாம்நினைத்தாப்போல பொருந்தமண்டபத்தைசெய்தான்
திகழும்என்தம்பிவாடா சிற்பசாஸ்திரிக்குவேண
வெகுமதியெல்லாந்தந்து மேன்மையாயனுப்புவாயே

வசனம்.

கேளுமென் சகுனிமாமா இந்தசிற்பசாஸ்திரி மெத்த கெட்டிக்காரன் தான்நினைத்தபடியே வெகுசட்டதிட்டமாய் மண்டபத்தை செய்தானடா தம்பிதுற்சாதனா இந்தசிற்பாசாஸ்திரிக்கு வேணுமென்ற வெகுமதியெல்லாங்கொடுத்துச் சந்தோஷமாயனுப்புந் தம்பி துற்சாதனா

துற்சாதனன் சொல்-வசனம்

அப்படியே கொடுத்தனுப்புகிறேனண்ணாவே

திரியோதிரன்-சகுனிக்குச்சொல்-விருத்தம்.

மண்டபமுடிந்தவாறு மனதினில்நினைத்தவாறும்
துண்டகப்பாண்டவாளை சூதினால்வெல்லும்வாறும்
கொண்டவன்பிதாவுக்கிதை உறவேயவர்கையோலை
அண்டியேபாண்டவர்க்கு அனுப்பிடவேண்டும்வாரீர்

வசனம்.

கேளுமென் சகுனிமாமா நம்மண்டபங்கட்டினதும் பஞ்சபாண்டவாகளைச் சூதினாலேவெல்ல வேணுமென்று நினைத்திருக்கிறது இதுகளையெல்லாம் என்பிதாவாகிய திருதராஷ்டிரமகாராசனுக்குச் சொல்லி அவர்கைபட ஓலையனுப்பி பாண்டவர்களையழைப்பிக்கவேண்டுமே ஆனபடியினாலே என் பிதாவினிடத்திற்குப் போவோம் வாரீர்

சபையோர்கள்-சொல்-வசனம்

அப்படியேபோவோம் ஸ்ரீதுரியோதனமகாராஜனே

திரியோதிரன்-திருதராட்டிரனுக்குச்சொல்-போற்றிவிருத்தம்

என்னையீன்றவனே போற்றி யெனையாண்டவனே போற்றி
என்னையுமுளகையாள வெழில்முடிதரித்தாய்போற்றி
என்னையீடேற்றவேண்டிய தொன்றந்தடைசெய்யாமல்
என்னுள்ளேநினைத்துவந்த யெண்ணத்தைமுடிப்பாய்போற்றி

திருதராட்டிரன்-திரியோதிரனுக்குச்சொல்-விருத்தம்.

ஐயனேவாடாயெந்தனழகுகண்மணியேவாடா
வையகமுழுதுங்காக்கு மன்னர்மன்னவனேவாடா
துய்யதோர்குருகுலத்து துரைகளரத்தினமேவாடா
செய்யசெங்கோல்செலுத்துஞ் செல்வனேவாடாவாடா.

வசனம்.

மகனே திரியோதனா என்சுவாமி உன்னுடனேகூட யார்வந்திருக்கிறார்களப்பா அப்பாதுரோணாச்சாரி வந்திருக்கிறார் தெண்டன் தெண்டமையா உட்காருங்கள் கர்ணமகாராசன் வந்திருக்கிறார் வாடாஅப்பா எங்கள்சகுனிமாமாவந்திருக்கிறார் அப்படியா அப்படியா அத்தானே வாரும்வாரும் எங்களத்தானிருக்கும்போது எங்களுக்கென்ன குறைச்சலுமில்லையே.

திரியோதிரன்-திருதராட்டிரனுக்குச்சொல்-விருத்தம்.

வல்லபிதாவசித்திர மண்டபமொன்றுண்டாக்கி
வில்லிறபாண்டவாளை வைத்துசெய்தழைத்துக்காட்டி.

தொல்லைசூதாடியவர் துரைத்தனம்பறித்துக்கொள்ள
ஒல்லையில்நாங்கள்நல்ல யோசனைசெய்தோமையா,

வசனம்.

கேளுமென்பிதாவே நவரத்தினகசிதமான ஒருமண்டபமுண்டாக்கி பாண்டவாளையழைத்துக்காண்பித்து சூதாடும்படியாய்ச்செய்து அவர்கள்வாழ்வையெல்லாம் பறித்துக்கொள்ள யோசனைசெய்திருக்கிறோமையா.

திருதராட்டிரன்சொல்-விருத்தம்

உகந்துபோனார்களோவ றொடுங்கினார்மக்களொன்று
இசைந்திராப்பகலுமையோ யேக்கங்கொண்டடிவயிற்றைப்
பிசைந்தேயழுதுகொண்டு பிரட்டல்கொண்டாட்டல்கொண்டு
அசந்துநித்திரையில்லாம லேயாநான்றவிக்கிறேனே

வசனம்.

அடா என்கட்டிமகனேபாண்டவர்பேச்சுஉயர்ந்துபோச்சுதென்றுதிக்கில்விழுந்துஏக்கங் காண்டு அடிவயற்றைப் பிசைந்துக்கொண்டுஅழுதகண்ணீருஞ்சிந்தையுமாயிருக்கிறேன் அன்னமுண்டானித்திரையுண்டா நீங்களிந்தயோசனைசெய்ததுசரிசரிதகும்தகும்ஆஆ

இதவுபவன்சொல்விருத்தம்

உடன்றையாய்நீங்கள்செய்த யோசனைபடிக்குத்தானே
நடந்தையேயானாலிப்போ நமக்கிணையொருவருண்டோ
அடர்ந்திடுபாண்டவாளை யதோகெதியாக்கிநீயே
கடந்துலகாண்டாலெந்தன் கண்கள்வந்தாற்போலப்பா

வசனம்

மகனேதுரியோதனநீங்கள்செய்தயோசனைப்படிக்குத்தெய்வகடாட்சத்தினாலே அப்படியேவந்தால்உலகத்திலேநமக்கு எதிரியுண்டாபாண்டவர்களைஓட்டிவிட்டுஒருத்தனுமேஇந்தஉலகத்தையாள்வையேயானால்எனக்குப்போனகண்கள் திரும்பிவந்ததுபோலல்லவா இந்தயோசனை ஆர்சொன்னார்களப்பாமகனே

துரியோதனன்-திருதராட்டிரனுக்குச்சொல்-விருத்தம்

போர்செய்வோமென்றுகர்னன்பொருந்துமென்றுரைத்தான்தம்பி
சீர்செயுமற்றுள்ளோரும் செய்யலாமென்றுசொன்னார்
கூர்செயுஞ்சூதாலவர் குடியைநான்கெடுப்பேனென்று
போர்செயுஞ்சகுனிமாமன் பிரமாணிக்கமாகச்சொன்னார்

வசனம்

மேலும் பிதாவே கர்னமகாராசர் சண்டையினால் வெல்லவேண்டுமென்று சொன்னார் தம்பிதுச்சாதனனும் மற்றபேரும் அப்படியேசெய்யலாமென்றுசொன்னார்கள் அதுகூடாதென்று எங்கள் சகுனிமாமன் சொன்னது சூதினால்பாண்டவர்களை ஊரைவிட்டோடும்படியாய்ச்செய்கிறேனென்று பிரமாணிக்கமாய் சொல்லியிருக்கிறாரையா

திருதராஷ்டிரன்-சகுனிக்குச்சொல்-விருத்தம்.

உச்சாயப்பாண்டவாளை யோட்டிவிட்டவர்கள்தன்னை
வைச்சாலுமுந்தன்பார மாய்த்தாலுமுந்தன்பாரம்
பிச்சானபிள்ளையேயென் பிள்ளையுன்பிள்ளைகாணும்
மச்சானுன்வருளிருந்தால் வையகமகனேயாள்வான்

வசனம்.

ஓய்மச்சானே நானுள்ளபடியேசொல்லுகிறேன் அந்தப்பாண்டவாளை யோட்டிவிட்டு எங்களைபூமியிலே வைத்தாலும் உன்பாரந்தான் மாய்த்தாலும்உன்பாரந்தான்என்பிள்ளைகள்கள்ளங்கவடுசூது தெரியாதபிள்ளைகள் என் பிள்ளைகளல்ல உன்பிள்ளைகள் எப்படியாகிலும் இவர்களைமுன்னுக்கு வரும்படியாய்ச்செய்யவேணும்அத்தானே.

சகுனி-திருதராஷ்டிரனுக்குச்சொல்-கவி

அத்தானுனையல்லாமல் மற்றாரினியுண்டோ
இத்தரணியெல்லாம் பெத்தால்வெல்வேனே

திருதராஷ்டிரன்-திரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

பெருத்ததொட்டிலையுமாட்டி பிள்ளையுங்கிள்ளிகூட
திருத்தமாயிப்பாரந்தத் திருடனைநம்பவேண்டாம்
வருத்தமென்சகுனிமாமன் வார்த்தையைக்கடந்திடாமல்
கருத்துடனடந்துகொண்டாற் கடைத்தேறிப்போவாயப்பா

வசனம்.

கேளும்திரியோதனா நம்மிடத்திலே பிள்ளையுங்கிள்ளி தொட்டிலையும்ஆட்டுகிறவர்போல இக்குமல்காயிருப்பவர்களுண்டு அந்தத்திருடனைநம்பவேண்டாம் உன்சகுனிமாமன்சொன்னபடி நடந்துகொண்டாயேயானால் கடைத்தேறிப்போவாய் திரியோதனா

திரியோதிரன்-திருதராட்டிரனுக்கு,சொல்-விருத்தம்

மந்திரிமுனிவர்சொன்ன வார்த்தையைமறந்திட்டாலும்
தந்திரமானசொல்லை தடுப்பேனோதடுக்கமாட்டேன்
சுந்திரபாண்டவாளை சுருக்கினில்வரவேசொல்லி
யெந்தையேயுன்கையோலை யெழுதியேயனுப்புவீரே

வசனம்.

கேளும்பிதாவே சாமானுக்கிரக சாமார்த்தியமான மகாத்துமாக்களுடைய வார்த்தையைத்தடுத்தாலும் என்சகுனிமாமன்சொல்லைதடுக்கமாட்டேன் இப்போதுபாண்டவாளை வரச்சொல்லி உன்கை ஓலையாக எழுதியனுப்பவேண்டும் பிதாவே.

திருதராஷ்டிரன்சொல்-விருத்தம்

நல்லதப்படியாகட்டும் நாளையதினத்திற்குள்ளே
வல்லபாண்டவர்களிங்கே வந்திடச்செய்கிறேன்யான்

சொல்லுந் துற்சாதனனே தூதினையனுப்பிவைத்து
வில்லினில்வலுமைபெற்ற விதுரனைவரச்செய்வாயே

வசனம்

கேளுமப்பா திரியோதனா உன்சொற்பிரகாரம் நாளையதினத்திற் குள்ளே பாண்டவர்களிங்கே வரும்படி செய்கிறேன் அப்பா துற்சாதனா நீசீக்கிரமாய் ஒருதூதனையனுப்பி வில்வினில் வல்லவனாகிய எனதம்பி விதுரனையழைத்துவரச்சொல்லடா துற்சாதனா

துற்சாதனன் சொல்-வசனம்.

அப்படியே யழைப்பிக்கிறேனையா

துற்சாதனன்-சேவகனுக்குச்சொல்-கவி.

பேசியவீரா விசியேயோடி
பூசியவிதுர ராசனையழைப்பாய்

வசனம்.

ஆரடா அடா தூதா எங்கள்சிறியதகப்பனான விதுரமகாராசனை யழைத்துக்கொண்டுவாடா.

சேவகன்சொல்வசனம்

அப்படியே யழைத்துவருகிறேன்சுவாமி
மக்களேசகுனியெந்தன் மைத்துனாதுரியாதனா
மிக்கவேயிருந்தசேதி வெளிப்படப்போகுதப்பா
அக்கரைபாண்டவான்வந் தகப்பனுக்கினிநீங்கள்
பொக்கிணக்கிணற்றில்கல்லை போட்டாப்போலிருங்களப்பா,

வசனம்.

சேனா என்மகனேதிரியோதனா அப்பாகர்ணாதுற்சாதனா சகுனிமைத்துனா இங்கே ஆலோசனைபண்ணினது வெளிப்படாமல்மோசம்போசம்பண்ணுகிறவர்கள் நம்பிடைகயிலகப்படுகிறவரையிலுங்கிணற்றிலேகல்லைபோட்டதுபோலிருந்துகொள் போய்வாருங்கள்.

திரியோதனன் சொல்-வசனம்

சரணம் சரணம் அப்படியேபோயிருக்கிறோமையா

சேவகன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

துதிபெறுவிதரனைஞ்சூரா போற்றி
விதிதருமநுவின்வேதா போற்றி
கதிர்பெறுமறநெறிதாதா போற்றி
மதிமிகுவிதுரமகிபா போற்றி

வசனம்.

சரணஞ்சரணம் விதுரமகாராசனே சுவாமியாக்கு,

விதுரன்-சேவகனுக்குச்சொல்-கவி

வீரியசூரா காரியமென்ன
சேருடனுன்னை யாரனுப்பிவிட்டார்

வசனம்.

அடா தூதா உன்னையனுப்பிவைத்தது யார்சொல்லும்பிள்ளாய்.

சேவகன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

அந்தணைகளாயுந்த னைவிந்தம்பாதாபோற்றி
இந்திசைமுழுதும்போற்று மிலங்குமன்றமையனை
வித்தகன்றிருதராஷ்டிர னேவுங்கருணையிப்போது
மெத்தவுமாவலாக விரைவுடன்வரச்சொன்னனே

வசனம்

கேளுமையா விதுரமகாராசனே இராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ராஜமார்த்தாண்ட உத்தண்டகோலாகலமான திருதராஷ்டிரமகாராஜன் தங்களை அழைத்துக்கொண்டுவரச்சொன்னார் சுவாமி.

விதுரன்வருகிற-தரு-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

சத்தியவிதுரராஜன்வந்தான்படைசுற்றுபுடை சூழ
புவிமுற்றும்புகழ்படைத்த சத்தி

சரணங்கள்.

ஒருவருமெதிரில்லா வில்லான்-இந்த
உலகமுழுவதுமொருபொய்யுஞ் சொல்லான்
விருள்ளபேர்கண்முன் னில்லான்மேலும்
மெய்யானபொருளல்லால் வீண்பொருள்சொல்லான்-சத்தி
தருமத்தைமறவாத சீலன்-ஒன்றும்
தவறில்லாத்தகைபெற்ற அர்ச்சுனனுக்கநுகூலன்
அருமைபுகழினில் விலாசன்தினம்
அனைவர்க்குந்தயாளன் ஆப்தபரிபாலன்-சத்தி
வந்தவன்றன்னை யல்லாமல்-இது
மாயவார்த்தையென்னும் மறுவார்த்தைதவிள்ளாமல்
சந்தேகமேனும் கொள்ளாமல்
தமையனழைத்ததற்குத் தடைசொல்லிதள்ளாமல்-சத்தி

விதுரன்-திருதராஷ்டிரனுக்குப்-போற்றிவிருத்தம்

விண்ணெலாம்புகழு மதிபனைபோற்றி
கண்ணெலாமுலவாக் கண்டனைபோற்றி
எண்ணெலாம்படைத்த விறைவனைபோற்றி
தண்ணெலாம்போற்றுமென் தமையனேபோற்றி.

திருதராஷ்டிரன்-விதுரனுக்குவாழ்த்து-கவி.

மதிராசர்முடிசேர் சதுராவாழி
மதுராமிர்தசொல் விதுராவாழி.

விதுரன்சொல்-கவி.

மின்னிறையகமேவ வேந்தர்கள்வேந்தே
மின்னிலமுதல்வா மதிகுலவாசே
தன்மையான சபைதனிலிப்போ
என்னையுமழைத்த தியமயிவிரோ

திருதராஷ்டிரன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

விதுரனேகேளாய்நீதான் விக்கினஞ்சொல்லவேண்டாம்
மதுரமாமோலையொன்று வாகுடனெழுதித்தானே
இதமுடனேகுருக்கண்டே இட்சணம்நீதானசென்று
பதமுடன்பாண்டவாளை பரிவுடனழைத்துவாராய்

வசனம்.

கேளும் தம்பிவிதுரா நீயாதொரு தடையுஞ்சொல்லாமல் பாண்டவர்கள் இவ்விடம்வரும்படியாய் ஒருஓலை எழுதித் தருகிறேன அதை எடுத்துககொண்டுபோய் பாண்டவர்களை அழைத்துவாவேணும்தம்பி.

விதுரன-வசனம்

அப்படியே அழைத்துவருகிறேன்-அண்ணாவே.

திருதராஷ்டிரன்-இராயசக்கணக்கனுக்குச் சொல்-கவி

பொழுதுபோமுன்னே தொழுதராயசனே
பழுதிலாஓலை எழுதடாநீதான்

இராயசன்சொல்-வசனம்

அப்படியே எழுதுகிறேன் சுவாமி

இராயசக்காரன்-ஓலையெழுதிவாசிக்கும்-விருத்தம்.

சிறந்தசீவிபாண்டவர்க்கு ஜெயங்கள்மேன்மேலுமுண்டாம்
வாஞ்செசிதம்பிமார்கள மண்டபமொன்றுசெய்தார்
சட்சணமாகவந்து நீங்களும்பார்க்கவேண்டாம்
நிறஞ்செறிவிதுரன்பின்னே நடையின்றிவருகுவீரே,

திருதராஷ்டிரன்-வசனம்.

அடடா இராயசக்காரா இவ்வோலை செந்திரிக்கைப் போட்டு எங்கள் தம்பி விதுரரசன்கையில் கொடும்பிள்ளாய்

இராயசக்காரன்-சொல்-வசனம்

அப்படியே கொடுக்கிறேன்-சுவாமி

விதுரன்-ஓலைகொண்டுபோகும்போது-விசனப்பட்டுச்சொல்லுகிற

தரு-இ-ம்-திரிபுடைதாளம்

பல்லவி.

ஐயையோ இப்படியுஞ்செய்வாரோ துரோகம்
அரி அரியினை தனியேத்தாறலாமோ சேசபம்

அனுபல்லவி.

ஐயையோயிதுசகுனியால்விளைந்த மூலமோ
அகமிகுந்தகவுரவர்க்குயுகமுடிவு காலமே-ஐயை

சரணங்கள.

கர்ணன் துற்சாதனன் சகுனிதுரியோதனன் குது
கருதியவாக்கொடிமுடிந்தாபடவஞ்ச மீது
சின்னஞ்சிறுபாண்டவர்க்கு இன்னங்கருத்தெரி யாது
திருவுளமேதுணையல்லால்திக்கொருவரினி வேறுஐயை

நத்துந்திருதராஷ்டிதனுக்கு னிரண்டோ
நம்பளைத்துகழுத்தபுக்குஞாயமதைக் கொண்டோ
சூத்திரஞ்செய்சகுனியிதைக்குறித்தென்ன கண்டோ
கொலைசெய்துவாழ்ந்தவர்கள குவலயத்திலுமுண்டோ-ஐயை
தருமபுத்திரனுக்கிரகசாரமும் பொல்லாதோ
சதுராகதிவினையன் தருமமும்நில்லாதோ
அருமையெண்ணுப்பாவிகளை யக்கிரமுங்கொல்லாதோ
அரசனன்றுகொன்றுக்கால் தெய்வநின்றுகொல்லாதோ-ஐயை

பாண்டவர்கள்தேசத்திற்கு-விதுரன்போகும்போது
தூதர்கள்முன்னோடி-தருமராசனுக்குச்
சொல்லுகிற-விருத்தம்.

தரணியிலுதித்தோர்க்கெல்லாந் தாயகமாயிருந்து
கருணையால்குளிக்கும்பஞ்ச கர்த்தனேநின்றாள்போற்றி
திருவெல்லாம்படைத்தவுங்கள் சிற்றப்பன்விதுரராசன்
வருகிறாரையாவுங்கள மலர்ப்பதம்போற்றிபோற்றி

வசனம்.

சுவாமிபராக்கு உங்கள்சிற்றப்பனை விதுரமகாராஜன் அஸ்தினாபுரத்திலிருந்து தங்களிடத்திற்கு இதோவருகிறார்சுவாமி

பாண்டவர்கள்-விதுரனுக்குப்போற்றி-விருத்தம்.

காவியங்கடலேபோற்றி கார்முகத்தலைவாபோற்றி
கோவிபல்முழுதுந்தேர்ந்த குற்றமற்றவனேபோற்றி
மேவியெங்களைரட்சிக்கும் வித்தார்போற்றிதர்ம
தேவனையானெங்கள சிற்றப்பாபோற்றிபோற்றி

விதுரன்-பாண்டவர்களுக்கு-வாழ்த்து-விருத்தம்

மெய்வருநீதிதேர்ந்த மிகுவிகரணரேவாழி
கைவருஞ்சிலையில்வெற்றி பாண்டவீரர்களேவாழி
பொய்வருமொழிசொல்லாத புருஷவுத்தமரேவாழி
ஐவரும்வாழியெந்த னருமைமைந்தர்களேவாழி

துரோபதை-விதுரனுக்குப்போற்றிகவி.

நேமாகருணைநிதியேபோற்றி மாமா அடியார்வாழவேபோற்றி
பூமாதகலாப்புயனேபோற்றி மாமாவுன்றன்மலர்த்தாள்போற்றி

விதுரன்-துரோபதைக்கு-வாழ்த்து-விருத்தம்

கற்பினுக்கரசேயெந்தன் கண்ணின்மணியேவாழி
மற்றொருமையார்சிந்தை மகிழ்குலக்கொழுந்தேவாழி
பொற்புருமாதர்க்கெல்லாம் பொருந்துபூஷணமேவாழி
சொற்பொருளுணர்ந்தநல்ல துரோபதையேவாழி

பாண்டவர்கள்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

நீதியுநெறியுநல்ல நிலைமையு மெழுமன்பு
ஓதுமிதெல்லா முள்ள வுத்தமநின்றாள்போற்றி
தீதிலாதானைபிந்த சிறியோரைப்பொருட்டாயெண்ணி
ஏதுகாரணமாய்வந்தீ ரங்கையேயுரைசெய்வீரே.

வசனம்.

கேளும் எங்கள் சிறியதகப்பனைவிதுரமகாராசனே எங்கள் பேரில் கடாட்சம்வைத்து வந்தகாரியமென்ன தேவரீர் சொல்ல வேண்டுமையா.

விதுரன்-பாண்டவர்களுக்குச்சொல்-விருத்தம்,

பாலரேசொல்லக்கேளீர் பாண்டுராசனுக்குமூத்த
சீலனும்பெரியதந்தை திருதராஷ்டிரமகிபன்
மேலுமுங்களையழைத்து விசையுடன்வரவேசொல்ல
வோலையுமெழுதித்தந்தா னுள்ளபடிவேறேகண்டாய்.

வசனம்.

கேளும்பாண்டவர்களே உங்கள் தகப்பனுக்குமூத்த திருதராஷ்டிரமகாராசன உங்களை அதிசீக்கிரமாயழைத்து வரச்சொல்லியோலையெழுதிக்கொடுத்தார் சிறிதுஉன்னுக்குள் வினையும் நடந்திருக்கிறது பாண்டவர்களே.

தர்மர்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

தகப்பனாரழைக்கனுப்ப தடையதுசொலனேயானால்
நகைப்பரேயுலகிலுள்ளோர் நல்லதப்படியேபோவோம்
வகைசுபசோபனங்கள் மற்றதேதேனுமுண்டோ
துகைப்படவரவேசொன்ன சூட்சிமையுரைசெய்வீரே.

வசனம்.

என்சிற்றப்பனை விதுரமகாராசனே எங்கள்பெரியதகப்பனை திருதராஷ்டிரமகாராஜன் வரச்சொன்னார் அதற்குத்தடைசொன்னால்உலகம்பழிக்காதா அப்படியேபோவோம் ஆகிலும்இப்போது எங்களையழைப்பித்தகாரியந்தெரியச்சொல்ல வேண்டுமையா.

விதுரன்-பாண்டவாளுக்குச்சொல்-விருத்தம்.

நீசெய்யும்யாகக்கனக்குவந்திருந்து
நின்புகழ்பெருமையுங்கண்டு
நெடுமுடிதுரியோ தனன்கெடுசெருனி
நெஞ்சினிற்பொறாமையுமெண்ணி
மாசிலாப்பெரியமண்டபஞ்செய்து
மகிழ்ந்ததிற்குடி புகுந்தினத்தில்
மைந்தரேயுமையதில்வரவழைத்து
மாய்சூதாடியேயுங்கள்
தேசமுமரசுஞ்செல்வமும்பறிக்க
திருட்டுஆலோசனைசெய்து

சிறந்தவுன்பெரிய தகப்பனுக்கிதுகள்
செப்பினாலருஞ்சயமதியாய்
ஆசையாயென்னைவரவழைத்தீதீபா
யவரையழைத்துவாவென்ற
யடவுடனெழுதிக்கொடுத்தவுன பெரிய
யப்பனைகீயோலையிதப்பா.

தருமர் - அருச்சுனருக்குச்சொல் - விருத்தம்.

தொந்தனாயெவர்செய்தாலும் சூதுகளெவர்செய்தாலும்
தந்திரமெவர்செய்தாலுந் தருமமேஜெயமென்றெண்ணி
அந்தமேயிருந்ததம்பி யர்ச்சுனவாடாமூத்த
எந்தையாரனுப்புமோலை யெடுத்திதைபடித்திடாயே.

வசனம்.

கேளடாதம்பி அர்ச்சுனா நமக்குப் பகையாளியாயிருக்கிறபேர்கள் எத்தனை தொந்தரவுகள்செய்தாலும் சூதுகள்செய்தாலுந் தருமமேஜெயமாகையால் அர்ச்சுனா நம்முடையபெரியதகப்பனார் எழுதி வரவிட்ட ஓலையையெடுத்து வாசியடாதம்பி.

அர்ச்சுனன் - ஓலையைவாசிக்கும் - விருத்தம்.

சிரஞ்சீவிபாண்டவர்களுக்குஜெயங்கொளவே மேலுமுண்டாம்.
வரஞ்செறிதம்பிமார்கள் மண்டபமொன்றுசெய்தார்
நிரஞ்சனமாகவந்து நீங்களும்பார்க்கவேண்டும்
தரஞ்செறிவிதுரன்பின்னே தடையின்றிவருகுவீரே.

தருமர்சொல்விருத்தம்.

தன்மையும்புகழுநல்ல ஞானமும்வளமும்வாழ்வும்
வண்மையுமழகுசீர்த்தி மாக்கமுங்கொலுவுஞ்சீரும்
மேன்மையுவிரலுமோங்கும் வெற்றியுமெய்யுஞ்சார்ந்த
தொன்மையுமுடையோரைவா சூதாடநினைப்பதுண்டோ.

வசனம்.

நலமும்கீர்த்தியும்தயாளமும் ஞானமும்செல்வமும்வலுமையும் அழகும்கீர்த்தியும குணமும் சிறப்பும்பராக்கிரமமும்வெற்றியும் சத்தியமும்உள்ளவர்கள் சொக்கட்டான்முதலான சூதாட நினைப்பார்களோ இதென்னகாரணம் அரி அரி வாசுதேவா.

பீமன்சொல் - விருத்தம்.

வகையுள்ளோர்தர்மசிஷ்டர் வஞ்சகர்பானமில்லா
சுசிகரமில்லாயினர் சூதாடநினைப்பரல்லால்
இசையுள்ளோர்சூதாட யிசைவரோயிதனிலுந்தன்
கசிதருங்கள்ளுங்கொண்டு கள்ளையுங்குடிக்கலாமோ.

வசனம்.

பழிக்கஞ்சாதவரும் துஷ்டரும்வஞ்சனைசெய்வோரும்மானமில்லாதவரும் சத்தியமில்லாதவரும் சொக்கட்டான்முதலானசூதுக

ளாட நினைப்பார்களேயல்லாமல் நல்லவர்கள் ஒருநாளும் நினைப்பார்களா இதைவிட கள்ளைச் சுட்டுக்கொண்டு கள்ளைக் குடிக்கிறது மெத்த நல்லது.

தருமர்சொல்-விருத்தம்.

பஞ்சபாதகமிந்த பகடையுமொன்றேயொன்று
மிஞ்சியேவேதசாஸ்திர விற்பனர்விலக்கிவிட்டால்
வஞ்சகச்சூதுவித்தை தனக்கெதிரிருந்தேயாட
நெஞ்சினிலென்னைத்தானே நினைப்பது சகுனிமாமன்.

வசனம்.

அரி அரிநாராயணா சொக்கட்டான்முதலான சூதுகள் பஞ்சமா பாதகத்திலே இதுவுமொன்றென்று பெரியவர்கள் தள்ளிவிட்ட இந்த சூதுவித்தையை ஆடவேணுமென்று நினைத்தாய் தனக்கெதிராக இருந்து தன்னுடன் ஆடுகிறதற்கு என்னைத்தானா நினைக்கவேண்டும் நம்முடையசகுனிமாமன்,

அர்ச்சுனன்-விதுரனுக்குச்சொல்விருத்தம்.

பொல்லாததுஷ்டரிந்த புத்தியைகவனத்திற்கொண்டு
மல்லாடிகுஞ்சூதாட வரச்சொல்லியழைத்தாலும்
எல்லாருமறிந்தாலு மிகுந்தசிறப்பாயிந்த
கல்லாதசிறியோர்க்குந்தன கருத்தென்னவுரைசெய்வீரே.

வசனம்.

நல்லது அந்ததுஷ்டர்தான் இப்படிப்பட்ட துற்புத்தியைநினைத்து வரச்சொன்னாலும் உம்முடையதிருவுளத்துக்குச்சரியாயிருக்கிறதா சொல்லுமையா எங்கள்தகப்பனாரானவிதுரமகாராசனே.

விதுரன்தர்மருக்குச்சொல்-விருத்தம்.

வாதாடுந்துரியனுக்குஞ் சகுனிக்குங்கர்னனுக்குஞ்
சூதாடவாகாதென்று சொன்னதுகோடியுண்டு
காதாறச்சொன்னதெல்லாங் கருத்தினில்நினைத்திடாமல்
வேதாவும்பிதாவைக்கண்டு வென்னையுமனுப்பினாரே.

வசனம்.

கேளுங்கள்மக்களே துரியோதனனுக்குஞ்சகுனிக்குங்கர்னனுக்குஞ்சூதாடுகிறதொழில்நீங்கள் நினைக்கவேண்டாமென்று அனந்தம் நீதிகளைச்சொன்னாலும் கேளாமல் தங்களுக்குள்ளே உன்பெரிய தகப்பனான திருதராஷ்டிர மகாராசனுக்குச்சொல்லி அவரைக்கொண்டெனக்குத்தெரியப்படுத்தி உங்களை அழைத்துக்கொண்டு வரும்படியாய்ச்சொன்னார்கள் அப்படியிருக்குது அவ்விடத்தில் ஆலோசனை மக்களே.

வீமன்-தருமருக்குச்சொல்விருத்தம்.

வாயினில்விஷத்தைக்கொட்டி மடிந்திடச்செய்தான்பின்பு
நீவியமாளிகையில் நெருப்பிட்டுக்கொல்லப்பார்த்தான்
மேவியசூதாலிப்போ வென்றிடநினைத்தானந்தப்
பாவியர்முகத்தைத்தானும் பார்த்திடலாமோ அண்ணே.

வசனம்.

ஆதியிலே ஜலத்திலே வசியைகட்டு கொல்லப்பார்த்தான் மேலும் அரக்குமாளிகையில் நம்மைவைத்து நெருப்பிட்டுக் கொல்லப் பார்த்தான அதுவும்போதாமல் இப்போது சூதாடிநம்மைபஹ்நியாக்க நினைத்திருக்கின்றான் அப்படிப்பட்ட மகாபாவியான துரியோதனன் அழைத்தால் நாம்போகலாமா அண்ணாவே.

அருச்சுனன் தருமருக்குச்சொல-விருத்தம்.

வழிமறைநூல்கற்றோரு மருவுதண்ணீருமூன்று
பிழைபொறுத்திடுவதல்லாற் பின்னையும்பொருப்பதுண்டோ
முழுதிலும்மோசம்போற முறைமைகொண்டழைத்தானந்த
வொழுவிலாப்பகைவர்தங்க ளுறவினிவேண்டாமண்ணே.

வசனம்.

கேளும்அண்ணாவே தருமசாஸ்திரமறிந்தபேரும் தண்ணீரும் மூன்றுபிழைபொருப்பதல்லால் மேலும்பொருந்திடாது நாம்நாள் தோறும் அவர்கள்செய்யப்பட்ட மோசத்துக்கெல்லாம்உட்படுகிற படியினாலே இப்போதும் அழைக்கிறார்கள் அவர்களுறவும்நமக்கும்வேண்டாம் நாமும்அங்கேபோகலாகாது அண்ணாவே.

நகுலன்-தருமருக்குச்சொல்விருத்தம்.

விதித்தொருபாவஞ்செய்தால் மேலதையனுபவிப்பார்
பதைத்திடாதிருந்தேயின்னம் பார்த்திடுவோமென்றாலும்
உதைத்தகாற்புழுக்குமுன்னே வுளப்புமேபெருகொணாது
மதித்தவர்நட்பும்வேண்டாம் வருந்துயர்நமக்குவேண்டாம்.

வசனம்.

அண்ணாவே அவரவர்கள்செய்த பொல்லாங்கு பின்னாலனுபவிப்பார்களென்றாலும் உதைத்தகால்புழுகிறதற்குநாட்செல்லும் அதனிலும் உளப்புபொறுத்துமுடியாது அதுபோலவர்களிடத்திற்கு போனால் ஏதாகிலும் ஒருபொல்லாங்கு வரவேண்டியதில்லை அண்ணாவே.

சகாதேவன்-தருமருக்குச்சொல் விருத்தம்.

பூனைவாயெலியும்வேங்கை புலியின்வாய்மானுங்காட்டில்
ஆனைவாய்த்தழையும்பொல்லா வரவின்வாய்மானுங்காட்டில்
மானமும்வலிவும்கெட்டு வையகமிருந்தபொல்லா
ஈனமும்வருநாமங்கே ஏகவொண்ணாதுசொன்னேன்.

வசனம்.

பூனைவாயில் எலியைப்போலப்பதைத்தாலும்புலியின்வாய்மான்போல் அலைச்சலும் ஆனைவாய்த்தழைபோலகுழைகளும்பாம்பின்வாய்த்தேரைப்போல மடிந்தாலும் அனுபவிக்கவேண்டியதாயாரும் ஆகையினாலே நாமங்கேபோகக்கூடாது அண்ணே.

தர்மர்-தம்பிமார்க்குச்சொல்-விருத்தம்.

எரிபடவண்டகோள மிடிந்தாலுமாழிபொங்கி
பிரளயம்வந்திட்டாலு பிதாவாக்கியந்தள்ளலாமோ
வருவதுவருமெப்போதும் வாராததுவாராதென்றுந்
திருகொன்றுசொல்லவேண்டாம் சென்றுநாம்வருவோமே

வசனம்.

இந்தபிர்மாண்டகடாக மிடிந்துவிழுந்தாலுஞ் சத்தசமுத்திரம் பொங்கி ஜலப்பிரளயமானாலும் பிதாவாக்கியத்தைத்தள்ளலாமோ நாம்போகாமலிருந்தாலும் வருகிறதுவரும் வாராதுவாராது நாமெப்படியும்போய்வருவோம் தம்பிமார்களே.

தர்மர்-சேர்வைகாரருக்குச்சொல் விருத்தம்.

பொற்புலிசேர்வைக்காரா புகழஸ்திநுபுரிக்கு
பரிவுள்ளவிதுரன்பின்னே பயணமாய்ப்போகவேணும்
தாணியிலரசரோடுஞ் சதுரங்கசேனையெல்லாம்
விருதுபேரிகைமுழங்கி விரைவுடன்வரச்செய்வாயே

வசனம்.

அடாபொற்புலிசேர்வைக்கார விதுரமகாராசன் அஸ்திநுபுரிக்குபோகவேணும் பிரயாணபேரிகைமுழங்கிச்சகலராசாக்களும் ரதகஜதுரகபதாதிகளும் வரும்படியாய்ச்செய்யடாசேர்வைக்காரா.

சேர்வைக்காரன்-தருமருக்குச்சொல் விருத்தம்.

துதிபெறுகுருகுலத்து துரைகள்ரத்தினமேயுந்தன்
பதுமபொற்பாதம்போற்றி பாரக்குளச்சரிக்கைசுவாமி
மதிபெறநமதுதேச மன்னருமற்றுமுள்ள
சதுரங்கசேனைவந்து சபையொடுசேர்ந்தாரையா.

வசனம்,

கேளும் ராஜாதிராஜபரமேஸ்வராபராக்கு சகலதேசத்துராசாக்களும் வந்தார்கள் சதுரங்க சேனைகளுந் தயாரா யிருக்கிறூர்கள் சுவாமி,

தருமர் அஸ்திநுபுரிக்குவருகிற-தரு-இ-ம்-கலியாணி.

திரிபுடைதாளம்-பல்லவி.

இராஜராஜமகிபதிதரணியில் மதிகுல தருமராஜன்வந்தானே

அநுபல்லவி.

மாசில்லாகரத்னமனுநெறிமுறையறிகுண சேகரன்
தேசுலவியகுணரசமிலகு சுதாகரன்
வீசும்புகல்பாண்டுபுத்திரன்மித்திர னெவர்களும்
பேசரியமறைமந்திரன்சுபரிகரன் பரிமள
வாசமிகுங்காரனஉருவில்மாரன்அதிகுலகுதபிரபல தீரன்
வரும்பிரமாண்டதிண்டிரல்மனு நெறி
தருமகண்டமண்டலாதிபதி மகாராஜா

மருமலரின்வளாதிருமருவிகெடிமாலை நமஸ்கரித்து
வருசூரெனப்பிரபைக்கத்தென்னஒளியா முடியைதரித்து
பொருதிலுருப்புயநெனிணையுறுபுஜகீர்த்தியைபொறுத்து நல்ல
புதியநவமணிவடமிரமதனில்புனிதமொழி திருத்தி
வருவளர்கதிர்திரைகொடுகிடுகிடென்று தாழ
மருமகபதிகளருமையினிருமருங்கு சூழ
அரிவையர்களெல்லாம்வெண்சாமரை போட
வைரிகள்பலபேர்பண்பாயிரை பாட
அற்புதம்அதித்ததம்பியற்கருக்க வந்தணர்த்துதிக்கசம்பிரமதுதிக்க
அந்தரங்கந்துந்துமிகவுரிகள்கொம்புகள்நிறைபம்பைகள்சவுரிகள்
வண்டிகள்செயக் கண்டிகள்திடுகள்
மங்களமிகு சங்குகள்கவுரிகள்
ஆரபாரபேரிகை விரத்தங்கிர
தாரைவிரைபூரிகை தவுண்டை
மல்லரிபல தில்லரிகருவுகள்
அலைகடலிடையெழு திருமொழியென
அடாமழைமுழுகு லதிர்தரிகலியென
அகமுழங்க விருதுகள்பலர்சொல்
மிகுமகிழ்ந்து சுபகரகுருகுலராஜ

பாண்டவர்கள்-திருதராட்டிரனுக்குச்சொல்-விருத்தம்.

சந்திரகுலத்தில்வந்த தயாபராபோற்றிபோற்றி
மைந்தர்மேல்கனிவுகூர்ந்த மன்னவாபோற்றிபோற்றி
விந்தைசேர்வேந்தர்க்கெல்லா மேவுவேபோற்றிபோற்றி
தந்தைசேர்யுந்தன்செம்பொற் றாளிணைபோற்றிபோற்றி.

திருதராஷ்டிரன்-பாண்டவருக்கு-வாழ்த்துக்கவி.

பூவிலேவரும் பூரணயசாய்
கோவியர்கையிற் குறைவிலாமெபராய்
ஆவியானவென் னருமைமைந்தரே
மேவியேநீங்கள் மென்மேலும்வாழ்கவே,

துரோபதை-திருதராட்டிரனுக்குப்போற்றி-கவி.

பூமாதென்னப் பொருமைபடைத்த
நேமமாயிந்த நிலம்புகழ்வெற்றி
தர்மர்யார்க்குந் தலைவர்வேந்தன்
மாமாஉந்தன் மலர்த்தாள்போற்றி.

திருதராட்டிரன்-துரோபதைக்கு-வாழ்த்துகவி.

அருமையுமறிவுயன்பும் ஒழிமையுமிகவுமுள்ள
மருமக்கள்நிகரதான மருமகளேநீவாழி

திருதராட்டிரன்-பாண்டவர்களுக்குச்சொல்-விருத்தம்.
விழுவிலாமாசுஙல்ல வனுமையும்வாழ்வுஞ்சீரும்
அழகுடன்பெற்றிருங்க ளலங்காரசம்பிரமத்தை
தழுவுமென்தம்பியுங்கள் தந்தையாம்பாண்டுராசன்
பழுதாக்கவேணும்வாரும் பாக்கியஞ்செய்கிலேனே.

வசனம்.

கேளுங்கள்மக்களே உங்கள் துரைத்தனத்தையும் பறாக்கிரமத்தையும் செல்வத்தையும் அழகையும் உங்கள்பிதாவான என்தம்பிபாண்டுமகாராசன் கண்களிக்கப்பார்த்து சந்தோஷப்படுகிறதற்கில்லாமற் போச்சுதே அதுதான் எனக்கொருகுறை பின்னொருகுறையுமில்லை மக்களே.

தருமர்-திருதராட்டிரனுக்குச்சொல்-விருத்தம்.
தூயநீர்குமிழிவானில் தோன்றியமின்னல்போலும்
மாயுமிவருதலென்றுன் வருந்துவதினியேதையா
தாயுமாந்தந்தையாக தருமமாநீயிருக்க
சேயாரமெங்களுக்குச் சிந்தையிற்குறைவேருண்டோ.

வசனம்.

கேளும் எங்கள் பெரியதகப்பனுரான திருதராட்டிரமகாராசனே எங்கள்வைபோகத்தை தகப்பனுகிய பாண்டுமகாராசன் பாற்கின்றதற்கில்லாமல்போச்சுதென்று சொல்லவேண்டியதேன் சகலத்துக்கும் நீரேதாயுந்தந்தையாகயிருக்க எங்களுக்குவேறொரு தாழ்வுண்டோபிதாவே.

திருதராட்டிரன்-பாண்டவர்களுக்குச்சொல்-விருத்தம்.
மனமகிழ்ந்தம்பியர்கள் மண்டபமொன்றுசெய்தார்
கனமாகநீங்கள்வந்து காணவேவேண்டுமென்று
நினைவுகொண்டழைத்தேனப்பா நீங்களும்வந்துவிட்டீர்
இனிதுடனவரும்நீரும் யிஷ்டமாயிருங்களப்பா.

வசனம்.

கேளுங்கள் என்னுடைமக்களான பாண்டவர்களே உங்களைகாண்கிறதற்கு யெனக்கு கண்ணிலலாமற்போனலும் உங்கள் வசனத்தையாகிலும் இந்தகாதிலே கேட்கிறதற்கு எனக்கு ஆசையாயிருக்கிறது அதுவல்லாமல் உங்கள்தம்பிமார்கள் ஒருமண்டபஞ்செய்தார்கள் அதை நீங்கள்பார்க்கவேணுமென்கிற ஆசையாயழைப்பித்தேன் கண்டுகலந்து பேசி அருமையா யிருங்களப்பா மைந்தர்களே.

திருதராட்டிரன்-பாண்டவர்களுக்குச்சொல்லிய-கவி.
வளஞ்செழுமுங்கள் வரவுகண்டுநான்
உளங்களிகூர்ந்தன னுருமைமைந்தரே
விளங்கியதாயையும் வீஷ்மர்தம்மையுங்
களங்கமில்லாமற்போய் கண்டுகொள்வீரே.

வசனம்.

என்பிள்ளைகளைப்பார்க்கிலும் இஷ்டமானபிள்ளைகள் இங்கே விட்டீர்களே அதுவேபோதும் வீட்டுக்குப்போம் உங்கள்தாயார் காந்தாரியை முன்னே கண்டுகொள்ளுங்கள் பீஷ்மர் துரோணர்மு தலானபேரையுங்கண்டுகொள்ளுங்கள் என்னுடைமக்களே.

பாண்டவர்கள்-வசனம்.

அப்படியேகண்டுகொள்ளுகிறோம் பிதாவே.

பாண்டவர்கள்-காந்தாரிக்குப்போற்றி-கவி.

வயமிருவாசற் வாகவேபோற்றி
ஜெயமிருகமலத் திருவேபோற்றி
வியமிருமுலை விளக்கேபோற்றி
தயைமிகுபெரிய தாயேபோற்றி.

காந்தாரி-பாண்டிவர்களுக்குச்சொல்-கவி.

பன்றியானதுதான்சும்மா பலகுட்டிப்போட்டாப்போலே
துன்றுடநூறுபிள்ளை கணக்குக்குபெற்றேனப்பா.

வசனம்.

பன்றியானது பலகுட்டிப்போட்டாப்போலே கணக்குக்குநூ றுபிள்ளைபெற்றேன் ஒன்றுக்காகிலும் புத்தியுண்டா திறமையுண் டா சௌரியமுண்டா தாஷ்டிகமுண்டா உங்களைப்போலகீர்த்திபெ ற்றதுண்டா ஆருடுப்பாகெட்டேனேஏதாகிலுமுண்டா அதுஎன்னு டையவயறுசெய்தகொடுமை எப்படியாகிலும் நன்றாயிருங்களப்பா

துரோபதை-காந்தாரிக்குச்சொல்-விருத்தம்.

இ-ம்-ஆனந்தபைரவி.

திறமுடன்திறமுமிக்க செல்வமுஞ்சிறப்புஞ்சீறும்
பொருவிலாவளமுநல்ல புத்திரபாக்கியமும்பெற்று
ஒருவருமிணையிலாத வுத்தமிபென்றசொல்லும்
மருவியபெரியமாமி மலர்ப்பதம்போற்றிபோற்றி.

காந்தாரி-துரோபதைக்குச்சொல்-விருத்தம்.

எருமைகள்கூட்டம்போ லெனக்குவாய்த்திடு
மருமகப்பெண்களென் மக்கட்கோர்வையோ
ஒருமையாயுன்னைப்போ லொருபெண்காண்கிலேன்
எரியுதுயென்செய்வே னெழுந்திராய்பெண்ணே.

வசனம்.

எருமைக்கூட்டம்போலே இத்தனைபேர் மருமகளிருந்தும் எ ன்னத்துக்கு ஆச்சுது ஒருநாரிக்காவது ஒருசித்து வித்தைகள் தெ ரியுமா உன்னைப்போலே மருமகள் குந்தியில்லாமற்போனாளேயெ ன்றுஎன்வயிறெரியுது என்னசெய்வேன் எழுந்திரும்மாஎழுந்திரு.

தருமர்-துரோபதைக்குச்சொல்-விருத்தம்.

மங்கைதுரோபதையேயுந்தன் மாமியாரிடத்திற்றானே
சங்கையில்லாமல்நீதான் சதிருடனிருந்தையானால்

துங்கமாம்பீஷ்மர்கிருபர் துரோணரைமற்றுள்ளோரை
பொங்கமாய்ப்பணிந்துபோற்றி பொருந்தவேவருகுவோமே

வசனம்.

கேளும்பெண்ணே துரோபதை நாங்கள் பீஷ்மர் துரோணர் கிருபாசாரியர்களைக் கண்டுவருகிறோம் அதுவரையிலும் உங்கள்மாமியாரிடத்தி லிருப்பாய்பெண்ணே.

துரோபதைசொல்-வசனம்.

அப்படியேயிருக்கிறேன்சுவாமி.

துரியோதனன்-சேர்வைக்காரனுக்குச்சொல்-விருத்தம்.

திண்டிறல்சேர்வைக்காரா சீக்கிரமாகவோடி
மண்டபந்தன்னைப்பார்க்க வரச்சொன்னேனென்றுசொல்லி
எண்டிசைபுகழுகின்ற எழிறபஞ்சபாண்டவரை
கொண்டுநற்கொலுவிக்கிப்போ கொப்பனவழைத்துவாடா

வசனம்,

ஆரடா சேர்வைக்காரா இந்திரப்பிரஸ்தத்திலேயிருந்து பாண்டவர்கள் ஐந்துபேரையும் இந்தமண்டபத்தைப்பார்க்க நானழைத்தேனென்று அதிசீக்கிரமா யழைத்துவாடா.

சேர்வைக்காரன்சொல்-வசனம்.

அப்படியே யழைத்துவருகிறேன் சுவாமி.

சேர்வைக்காரன்-தருமருக்குச்சொல்-விருத்தம்.

மன்னவர்மன்னுபோற்றி மறைமுறைதெரிந்தாய்போற்றி
தன்கரில்லாய்போற்றி தருமபூபாலாபோற்றி
பொன்னின்மண்டபத்தைப்பார்க்கப் பொருந்தியயுங்களையிப்போ
நன்னயராஜராஜ னயமுடன்வரச்சொன்னாரே.

வசனம்.

இராஜாதிராஜபரமேஸ்வரா ரசமார்த்தாண்டசத்தி ராசேந்திராசத்திவ பிரபுமகா சத்தியபரிபாலகா தர்மபுத்திரமகாராசனே சுவாமிபராக்கு துரியோதனமகாராசன் உங்களையழைத்துவரச்சொன்னார்சுவாமி.

தர்மர்சொல்வசனம்,

அப்படியேவருகிறோம்பிள்ளாய்.

தர்மா-துரியோதனனைத்-தழுவிக்கொள்ளு-விருத்தம்.

திருவருளுலகமூன்றுந் திறமுடன்றுதித்துப்போற்றும்
தருமபுத்திரனேயந்தன் தமையனைசரணம்வாரும்
பெருமையும்புகழும்வாய்வும் பொறுந்துரியோதனவுன்
அருவைசேர்தம்பிமார்க ளனைவரும்நீயும்வாழி.

துரியோதனன்-தருமருக்குச்சொல்-விருத்தம்.

வழுவுறவுங்களுக்கு மயனென்னுங்கெப்வதச்சன்
தழுவுறசெய்ததந்த சபையிலுமதிகமாக
செழுநவரத்தினத்தாற் சிறக்கநான்செய்துவைத்த
அழகியமண்டபத்தி னலங்காரம்பாராயண்ணே:

வசனம்.

கேளும் அண்ணா தருமபுத்திரரே முன்னாலேயுங்களுக்கு மய னென்னுந் தச்சன் செய்துகொடுத்த சபையைப்பார்க்கிலும் அதிக உன்னிதமாகச் செய்துவைத்தேன் இந்தமண்டபத்திலுடைய அல ங்காரத்தைப்பாராயண்ணே.

தருமர்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

சுந்தரமிகுந்ததம்பி துரியோதனனேகேளாய்
அந்தமண்டபங்க ளேகம்நான்பார்த்ததுண்டு
விந்தையிதென்னசொல்வேன் விளங்குமுலகந்தன்னில்
இந்தமண்டபத்தைப்போல வெங்குநான்கண்டிலேனே.

வசனம்.

தம்பி துரியோதனா நான் அநேகமண்டபங்கள் பார்த்திருக் கிறேன் ஆனாலிந்த சொர்க்கமத்தியபாதாள திரிலோகத்திலேயுமி ப்படிப்பட்ட உன்னிதமான மண்டபத்தை நான் எங்குங்கண்டதில் லை வெகுலட்சணமாயிருக்கின்றது.

சகுனி-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

நூதனமாயச்சென்று நுட்பமாயலங்கரித்து
சோதிசேர்மண்டபத்தில் துரைமக்கள்வந்துகூடி
போதவேமகிழ்ச்சியாகப் பொழுதுபோம்படியாயிங்கே
ஏதொருகாலட்சேப மில்லாமலிருக்கலாமோ.

வசனம்.

கேளும் என்னுடைய மருமகனான துரியோதனா இந்த அலங்கா ரமண்டபத்திலே எங்களைப்போலொத்த துரைமக்களெல்லாம்வந் து சும்மாயிருக்கின்றது நன்றாயிருக்கவில்லை பொழுதுபோகும்படி யாய்எதாகிலும் ஒருகாலட்சேபம்பண்ணவேணுங்காணும்துரியோ தனமகாராஜனே,

துரியோதனன்-தர்மருக்குச்சொல்-விருத்தம்,

ஆமிதுமெய்தான்மெய்தா னண்ணாகேளொருவிண்ணப்பம்
நாமெல்லாம்போசனத்துக் கெழுந்துபோந்தனிலுமிங்கே
மாமனுநீயுமாக மகிழ்ச்சியாயெழுந்திருந்து
சூதாமரவேயோராட்டஞ் சொக்கட்டாடுவீரே.

வசனம்.

ஆ ஆ மெய்தான் மெய்தான் மெய்தான்மாமா சபாசு நன்றாய் ச்சொன்னீர் அண்ணா தருமபுத்திரமகாராசனே நாமெல்லோரும் போசனத்துக்குப் போகுமுன்பாக மாமாவும் நீயும் ஒரு ஆட்டஞ் சொக்கட்டான் போடுங்களண்ணே.

தர்மர்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

வேதனுவிருக்கஞானம் விளங்க நூலிருக்கநல்ல
நீதிசாஸ்திரமிருக்க நிபுணர்கள்பலரிருக்க
நூதனமாகச்செய்த நல்லுருமண்டபத்தில்
சூதிதுமடையர்செய்யுந் தொழிலையேசெய்யவேண்டும்.

வசனம்.

கேளுந்தம்பி துரியோதனா வேதங்கள் சாஸ்திரங்கள் மனுவிக்கியானங்கள் இதுமுதலான தருமசாஸ்திரங்களிருக்க இந்த அலங்காரமண்டபத்தில் முதல்முதல புத்தியில்லாதவர்களாடப்பட்ட சொக்கட்டான் ஆடவேண்டுமோ வேறேயொரு தொழிலில்லையா தம்பி துரியோதனா.

பீஷ்மர்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

சண்டையும்பகையும்பாருஞ் சாற்றியபிழையும்பொய்யும்
கண்டிதமொழியும்பொல்லாக் கலகர்கள்குடியிருப்பார்
கொண்டுகேள்சூதுவித்தை கொற்றவர்க்காகாதேயிந்த
மண்டலந்தன்னிலின்ன மற்றொன்றைச்செய்யலாமே.

வசனம்.

சண்டைக்கும் பகைக்கும் அசத்தியத்திற்கும் பொய்க்கும்வேறதுக்கும் யேதுவாயிருக்கப்பட்ட இந்தசொக்கட்டானை இங்கே ஆடவேணும் இது இராசசபைக்குயோக்கியமல்லவேறேயொருகாலட்சேபஞ்செய்யலாந் துரியோதன மகாராஜனே.

அர்ச்சுனன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

மனதினிலொன்றைவைத்து வாக்கினிலொன்றைப்பேசி
அனிவருந்துரோகஞ்செய்வோர் சூதாடநினைப்பதல்லாற்
றனதுபாராட்டிதம்பி தமயனென்றொருமையுள்ளோர
கனவிலுஞ்சூதமாடக் கருத்தினினினைந்திடாரே:

வசனம்.

கேளுந் துரியோதனா மனதினிலொன்றைநினைத்து வாக்கிலொன்றைச்சொல்லி ஒருவருடையபொருளை ஒருவர் அபகரிக்கவேண்டுமென்று நினைக்கப்பட்டசாமத்துரோகிகள் அந்தசொக்கட்டானடுவார்களேயல்லாமல் தன்தாய் அண்ணன்தம்பிகளென்று ஒருமையாயிருக்கப்பட்டவர்கள் ஒருக்காலும் இந்தச்சூதாடலை நினைக்கவேமாட்டார் துரியோதனா.

தர்மர்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

மனதினில்வஞ்சனைநித்தயாமனையெதிரியாக்கி
சினத்துசூதாலேயெங்கள் செல்வத்தைப்பறிக்கனூற்றாய்
நினைத்ததுயெதுகேட்டாலும் நிமிஷத்திற்றருவேனிந்த
அனர்த்தமாஞ்சொக்கட்டானை யாடுவதொழித்திடாயே.

வசனம்.

கேளுந்துரியோதனா சகுனிமாமனை யெனக்கு யெதிரியாக்கிசூதாடி யெங்கள்செல்வத்தைப் பறித்துக்கொள்ளவேண்டியதில்லை நீயெதைக்குறித்துக்கேட்டாலுந் தடையில்லாமல் நான்தருகிறேன் இந்தச்சூதாடுகிறதை நிறுத்தவேணுந்தம்பி துரியோதனா.

சகுனி-தர்மருக்குச்சொல்-விருத்தம்.

சுந்தரமாயோராட்டஞ் சொக்கட்டானடைச்சொன்னால்
சிந்தையுகடுடுங்கி திகிற்பட்டநீதானுமேல்

பத்தியுநினைந்துகேட்ட பொருளெல்லாந்தருவேனென்றாய்
பந்தமாய்க்கொடுக்கும் பவுஷிதோதெரிந்துபோச்சே :

வசனம்,

கேளுந் தர்மராசனே ஓராட்டஞ் சொக்கட்டானுக்குவாவென்றுசொன்னமாத்திரத்திலே பயந்துநடுநடுங்கி திகில்பிடித்து கழகழவழவழ பசபசவென்று முழிக்கிறீரே நீர்காணு துரியோதனமகாராசன்கேட்டதெல்லாங் கொடுக்கப்போகிறாய் நீகொடுக்கப்போகிற பவுஷு இதிலே தெரிந்துபோச்சுதேபோ-ஆ-ஆதர்மபுத்திரமகாராசனே.

கர்ணன்-தருமருக்குச் சொல்-விருத்தம்.

கதிக்கசூதாடிவெல்லக் கையிலாகாதநீதான்
எதிர்த்தபோர்க்களத்தில்நின்று யாரைநீவெல்லப்போறீர்
விதித்ததம்பியரும் விலவிலத்துளறிக்கொண்டு
பிதற்றுநீர்விட்டுவிட்டோம் பிராணனைக்காத்துகொள்வீர்.

வ-ம்-கேளுந் தருமராஜனே சொக்கட்டானுடி வெல்லப்போறாய் அது வெளிச்சந்தான் இவ்வளவுக்கே உன் தம்பிமாரும் நீயும்விலவிலத்து கலகலத்து கிடுகிடென்று நடுநடுங்கி முன்பின்தோன்றாமல் பிணத்து நீர்கள் நல்லதுஉங்களை விட்டுவிட்டோம நீங்கள் அடங்கலும் உங்கள்பிராணனைக்காப்பாற்றிக்கொள்ளுங்கள் போங்கள்போங்கள் வேலைமெனக்கிட்டதாகிறிகளா.

அர்ச்சுனன்-கர்ணனுக்குச்சொல்-விருத்தம்,

வஞ்சனைநினைத்தழைத்து மாயசூதாடச்சொல்லி
கொஞ்சமென்றிகழ்ச்சிசெய்து குதிக்கிறாயடாகர்ணா
நஞ்சினையிகழ்ச்சிசொன்ன நாக்கையுமறுத்துவுந்தன்
நெஞ்சினைப்பிளந்துவெட்டி நினைக்குடலெடுத்தேன்பாராய்

வசனம்.

கேளடா அடாகர்ணா கபடமார்க்கமாக எங்களை அழைப்பித்து வந்துசூதாடச்சொல்லி இகழ்ந்துபேசுகிற உன்னுக்கையறுத்துநெஞ்சைப்பிளந்து நினைக்குடலெடுக்கிறேன் இதோ அஸ்திரம்வருகின்றது இதைப்பிடித்துகொள்ளடா கர்ணா

தர்மர்-அர்ச்சுனனுக்குச்சொல்-விருத்தம்.

அடுத்தடுத்தென்சொன்னாலும அடா தம்பி அருச்சுனனேகேள்
பொறுத்தவர்பூமியாள்வார் பொறுபொறுபதறவேண்டாம்
தடுத்துநாம்சொலவேதன்ன தருமமேமெஞ்ஞானமென்றெண்ணி
பொறுத்திடுமாமனேனே போராட்டமாகிவாமே.

கேளடாதம்பி யருச்சுனா பொறுத்தவர் பூமியாள்வார் பொங்கினவர்காடாள்வார்என்றவார்த்தையைநீகேட்டதில்லையா அவர்தான் அதர்மம்பண்ணினாலும் இகழ்ந்துபேசினாலும் உனக்குக்கோபம்வரா

லாமாபொறு பதாரதகாரியஞ்சிதாரது நல்லதுதருமமே ஜெயம் முருகூட்டந்தான் போடுவோம் திருவுளமிருக்குது.

துரியோதனன்-தருமருக்குச்சொல்-விருத்தம்.

இதுசரிநன்றாய்ச்சொன்னீரின்று நானும் மெச்சிக்கொண்டேன்
சதிசெய்வனென்று சொல்லிசற்று நீயஞ்சவேண்டாம்
நீதியில்நீ தோற்றதெல்லாம் நீதானேகொடுக்கவேண்டும்
பதியிலென்மாமன் தோற்ற பந்தயம் நானேதாறேன்

வசனம்.

இதுவெகு சவாசு இப்படியல்லவோ துணியவேணும் அண்ணே தர்மபுத்திரரே இப்போது உன்னை மெச்சிக்கொண்டேன் முன்னே தானே சம்மதிக்கலாகாதா நாம் பாலும் தேனும் போல இருக்கிற அண்ணன் தம்பிகளுக்குள்ளே யதாகிலுமொருவருக்கொருவர் நடக்குமா நடக்காது ஆனால் நீர்தோற்றதேயுண்டானால் நீரே கொடுக்கவேண்டும் என்மாமன் தோற்றபொருளை நானே கொடுக்கிறேன் போடுங்கள் பார்ப்போம்.

தர்மர்-சகுனிக்குச்சொல்-விருத்தம்.

எந்தனுக்கெதிரியாக இருந்திந்த சூதாட
சொந்தமாய்வாயுங்கையுந் துடிக்கின்ற சகுனிமாமா
விந்தையாய் நூறுகோடி விலைபெற்ற முத்துமாலை
பந்தயமாய்க்குறித்து பண்புடன்வைத்தேன்பாராய்.

வசனம்

என்னுடனேகூட சொக்கட்டானாடுகிறதற்கு வாயுங்கையுந் துடிக்கின்றசகுனிமாமா இதோ நூறுகோடி பொன்பெற்ற முத்துமாலையை இதோ பந்தயமாகக் கட்டிவைத்தேன்பாராய்.

துரியோதனன்-தருமருக்குச்சொல்-விருத்தம்.

சாந்தமாங்குணத்தினமிக்க தர்மபுத்திரரேகேளாய்
வேந்தனென்மாமன் வைக்க வேண்டும்பந்தயத்துக்காக
போந்திடும்நூறுகோடி பொன்பெற்றவலயமித்தைப்
பந்தமாயெவரும்பார்க்க பந்தயம்வைத்தேன்பாராய்.

வசனம்.

கேளாய் அண்ணே தருமபுத்திரரே என்சகுனிமாமன் வைக்க வேண்டியபந்தயத்துக்காக இதோ நூறுகோடி பொன்பெற்றவாகுவலயத்தை எதிர்பந்தயமாகவைத்தேன் இதோபார்க்கிறா

முதலாட்டஞ்சொக்கட்டானாடுகிறது.

---

தர்மர்சொல்-தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆடதாளம்.

ஸ்ரீகிருஷ்ண அரிகிருபை யாளா-யுந்தன்
செயலல்லவோ தீனதயாளா ஸ்ரீகிரு

தருமருக்கு விழுந்தபந்தயத்தைச் சகுனிசொல்-வசனம்

ஓய் தருமராசாவே மூணைத்தொண்ணூறுதல் விழுந்தபடியிறு கேட்டுமிட ஆட்டந்தோற்றுப்போகும் முன்போடுகிறேன் பாரும்.

சகுனி-சொல்-தரு.

ஓடிவாடாகுட்டிச்   சாத்தான்-எந்தன்
உருட்டுக்கும்பிரட்டுக்கும்   உதவிசெய்காத்தான் ஓடி.
வ-ம். பன்னிரண்டு பத்துகாய்வைததபிறகு,

தருமர்சொல்-தரு

சத்தியமேதுணை-தருமமேஜெயம்.

சத்தியமேதுணையென்றுந்தர்மமே   ஜெயமென்றும்
உற்றுநினைத்தபேற்கு வுண்டோவுண்டோ   லயம் சத்
வ-ம். நாலத்தோரஞ்சு.

சகுனிசொல்-தரு.

தந்திரமேதுணையென்றுஞ்சமர்த்தே   ஜெயமென்றும்
இந்திரஜாலம்கற்றஎனக்கென்னமோசா   லயம்தந்தி

இதுவும்-சகுனிசொல்-தரு.

அக்கிரமந்துணையென்றும்   அவர்க்கேஜெயமென்றும்
தக்கவித்தைகள்கற்றசகுனிக்கென்   பயம்அக்கி.
வ-ம். இருபகடை-பன்னிரண்டு-ஈட்டு- இரிக்காலொன்பது.

தருமர்சொல்-தரு

பதாரமலேயாடுக்காணும்   மாமா
பதாரமலேயாடுக்காணும்
பதருமற்பாச்சிகை பக்குவமாய்ப்   போடு
பந்தயம்விழுந்தைப்பார்த்தாட   வேணும்-பதார
வ-ம். நாலு மூணுமூ.

சகுனிசொல்-தரு

சுருக்காகத்தானுடேவேணும்   ஆட்டம்
சுருக்காகத்தானுடேவேணும்
சுருக்காகபாச்சிகைவெறுக்காமலே   போட்டு
திருக்காகவேயாடுருக்காகப்   பேசாதேசுருக்
வ-ம். இரண்டெட்டும்-இரண்டுதுகை-பத்து.

தருமர்சொல்-தரு,

விழுபன்னிரண்டொருபத்து   ஆ-ஆ
விழுபன்னிரண்டொருபத்து
விழுபன்னிரண்டொருபத்து   விழுந்தாக்கால்
முழுதுங்குக்குமக்காயால்   முன்னேகட்டலாஞ்சோடுவிழுப
வ-ம். மூணத்தொண்ணு.

சகுனிசொல்-தரு

நான்கட்டுவேன்முன்னேசோடு   தம்பி
நான்கட்டுவேன்முன்னேசோடு
நான்கட்டுவேன்முன்னேசோடு
நான்கட்டகருங்குங்குமக்காயரெண்டையும்   குத்தி-நான்
வ-ம். இரிக்கால்-பன்னிரண்டு-ஒன்பது.

பத்தும்பகடையும்வேணும் இப்போ
பத்தும்பகடையும்வேணும்
பத்துடனேயொருபகடையும் விழுந்தால்
குத்தினகாய்வெட்டு குங்குமமும் கட்டலாம்பத்து

வ-ம். நாலத்தோராஞ்சு.

சகுனிசொல்-தரு

கட்டினஜோடுபோவேணும் இப்போ
கட்டினஜோடுபோவேணும்
கட்டினஜோடுபோர்தனக்காமுமொயில் போட்டு
எட்டுக்குங்குமங்குத்திலட்டுபோடவே வேணும்-கட்

வ-ம். இரண்டு பன்னிரண்டு-பத்து.

தருமர்சொல்-தரு.

என்கையிற்பந்தாங்காணோம் மூர்மடி
என்கையிற்பந்தயங்காணோம்
என்கையிற்பந்தயமேமேனைவிழக் காணோம்
முன்கையிலாறெண்ணுழுணத்தோதா வல்லாமல்-என்

வ-ம். ஆறெண்ணேழு

சகுனிசொல்-தரு.

பன்னிரண்டுதுகையெட்டும்வேண்டும் இப்போ
பன்னிரண்டுதுகையெட்டும்வேணும்
பன்னிரண்டுதுகையெட்டுபந்தயம்விழுந் தாக்கால்
பலிக்கும்நமதாட்டம்கெலிக்குமகெலிக்கு மொரு-பன்

வ-ம். இரிக்கால்-துகை-பன்னிரண்டு-எட்டு-பத்து

சகுனியும்-துரியோதனனும்-சந்தோஷப்பட்டுச்சொல்-விருத்தம்

என்னுடைமருமகனை யெழில்துரியோதனனேகேள்
மன்னனதருமர்முத்து மாலையைநான்கெலித்தேன்
பொன்னனமாமாவுன்னைப் புகழ்ந்திடவென்னாலாமோ
முன்னனவலக்கைதாரு முத்துநான்றருகுவேனே

வசனம்.

ஆ-ஆ என்னுடைமருமகனை துரியோதன மகாராசனே தருமராசன் பந்தயமாகவைத்த முத்துமாலையைகெலித்தேன்.

வசனம்.

ஆ-ஆ சகுனிமாமா உன்சாமார்த்தியத்தை என்னால்சொல்லமுடியுமோ ஏதோஉன்வலக்கையைத்தாரும்ஒருமுத்தங்கொடுக்கிறேன்.

சகுனி-தருமருக்குச்சொல்-விருத்தம்

மதியுள்ளதருமபுத்திரா மனதுநீதளரவேண்டாம்
முதல்முதல்தோற்றபேர்கள் முற்றிலுங்கெலிப்பார்கள்
ரதகஜதுரகநாடு நகரத்தைக்குறித்துமேலும்
இதமுடனினியோராட்ட மினவுமாடுவோமே.

வசனம்.

கேளுந்தருமராசனே சாம்தேற்றுப் போனேனென்றுநினைக்கவேண்டாம் முதல்தோற்கிறது நல்லதினிமேல் நீயெகெலிப்பாய் ஆகையால் உன்னுடைய ஆனைசேனை நாடுநகரம் பரிவாரங்குறித்து பந்தயங்கட்டி இன்னுமொருதரம் ஆடுவேவாய்வாரும் தருமராசனே

## இரண்டாவது ஆட்டம்.

——— (*) ———

சகுனிசொல்-தரு-இ-ம்-நாதநாமக்கிரியை-மிசுரதாளம்

நானெகெலிக்கிறேன்பார் இந்தஆட்டமுங்
நானெகெலிக்கிறேன்பார
கோனனதருமர்கொடித்தேருங் குதிரையும்
ஆனையுஞ்சேனையுமவராளுந் தேசமுங்-நானே

வ-ம். துகை-இரிக்கால்-எட்டு-பன்னிரண்டு-பத்து

தருமர்சொல்-தரு.

தருமமேசத்தியம் அரிஅரி
தருமமேசத்தியம்
இம்மையிற்கோடியிடறுகள் வந்தாலும்
நம்மைசேர்ந்தெகரத்தை தோற்றாலுந்-தருமு

வ-ம் துகை நாலத்தொரஞ்சு

இனிவிடுவேனே நான்கொஞ்சத்தி
லெழுந்திருப்பேனே
சனியாயேழரைநாட்டுச் சனிபோலே பிடித்து
முனிவர்யெதிர்பந்தயமுழுதுமேமாடி யடித்துநானே இனி

வ-ம்-பன்னிரண்டு-பத்து

தருமர்சொல்-தரு.

விட்டுவிட்டாலும் விடமல்நான்
கட்டுபட்டாலும்
குட்டுபட்டாலுங்குறைநவந்து சேர்ந்தாலும்
நஷ்டப்பட்டாலுங்கடுக்கம்வந் திட்டாலும்-தருமு

வ-ம்-இரிக்கால் பத்து

சகுனிசொல்-தரு

ஏற்கவேசூது வழுவெழுன்று
விதற்கெலிப்பேனு
பார்கிலென்துகையைப் பொக்கிஷத்தொட்டி
மூர்க்கமாய்த்தொடைதட்டி முன்னே ஜோடுகெட்டி

வ-ம்-பன்னிரண்டு-துகை-பத்து

தருமர்சொல்-தரு.

சூதுசெய்தாலும் என்றுமதும்
பேர்துசெய்தாலும்

காதகஞ்செய்தாலுங்கபடமே — செய்தாலுங்
கோதகஞ்செய்தாலுந்தொந்தரை — செய்தாலுந்-தரும
வ-ம்-ஆறுண்ணேழு

பாண்டவர்சாரை — சகுனியென்னும்
பாம்பின்வாய்த்தேரை
பாண்டவரென்னைப்பிடித்துச் — சொல்லாவண்ணம்
மூண்டதுசூதுமுடிந்தது — என்னென்னம்-சாமே
வ-ம்-பன்னிரண்டு-எட்டு-ஆறுநாலு-பத்து

தருமர்சொல்-தரு

மிக்கவேயின்று — எங்களைவ்
விதத்திலும்வென்று
சொக்கட்டாணுடித்துஜங்கட்டி — யாண்டாலும்
இக்கட்டாலெங்களுக்கிடர்வந்து — மூண்டாலுந்-தரும
வ-ம்-மூணத்தொண்ணூ

சகுனிசந்தோஷப்பட்டு துரியோதனனுக்குச்சொல்-கொச்சகம்

அஞ்சுபேருந்தவிர யானைபரிசேனாதம்
இஞ்சலுள்ளநாடுகள் ரின்பமிகுசேனாதம்
வஞ்சவுப்புசட்டி வரவோடுமில்லாமல்
பஞ்சவரைப்பஞ்சாய்ப்பறக்கடித்தேன்பார்த்திப

வசனம்.

கேளும் என்னுடைய மருமகனை துரியோதன மகாராசனே இந்தப்பாண்டவாளைவர்தவிர இவர்களுக்குள்ள ரதகஜதுரகபதாதிகளையுஞ்செலித்து உப்புசட்டி வரவோடுங்கூட இவர்களுக்குச் சுதந்திரமில்லாமல் பஞ்சவரை இலவம்பஞ்சாய்ப் பறக்கடித்தேன் பார்த்தையோ துரியோதனமகாராசனே.

துரியோதனன்-சகுனிக்குச்சொல்-விருத்தம்.

இத்துடன்விடலாகாது யிவர்க்குள்ள நம்பிமாரும்
அத்துடனிவருமாக ஐவர்தம்பேரையுங்குறித்து
ஏத்துடனினியாட்ட மிசையவேநன்றுயோடி
கொத்துடன்செலித்தாலெங்கள் குலதெய்வம்ஸ்ரீராமாமா

வசனம்.

கேளுங்காணும் ஒய்மாமா இதிலேமகிழ்ந்து போருய் வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் இன்னம் நாலுபேரு மிருக்கவில்லையா இத்தருமராசாவிருக்கவில்லையா ஆகஐவர்துபேரையுங்குறித்து இனியாட்டம் போட்டாலல்லவோ சரி

பொய்வளர் அண்ணன்தேவி பெற்றதாயாச்சேயர்க
ளையலைக்குறித்தேயாடத் தகாதென்றுசொல்லொணாதே.

வசனம்.

கேளாய் அண்ணா திருதாட்டிரமகாராசனே இவ்வனியாயம் உலகத்திலுண்டோ உன்னுடையசமஸ்தானத்துக்கு என்னகேடுகாலம்வந்ததோ உன்மகனுக்கு அந்ததுரோபதையம்மன் பாரியாளானபடியினால் தாய்க்குச்சமானமாச்சுதே அவளையும் வைத்தாடச்சொல்லி உன்மகன்சொல்வதைக்கேட்டு நீசும்மாயிருக்கலாமா உன்சொல்லைத்தள்ளிப்போடுவானா வேண்டாம் வேண்டாமென்று ஒருவார்த்தையைச்சொல்லத்தகாதா ஐயையோ அண்ணே.

சகுனி-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

தோற்றுப்போனவர்களொன்றுஞ் சொல்லாமலிருக்கலுமேனும்
வார்த்தைசொல்லாமற்பற்ற மன்னவர்பார்த்திருக்க
ஆற்றமாந்தலையிறக்க முனக்கிப்போனதென்ன
பேற்றவுன்ஞாயமிங்கே யிருக்கட்டும் போம்போங்காணும்.

வசனம்.

தோற்றுப்போன்பாண்டவர்கள் மாணிக்கம்போல்வாயைத்திறவாமலிருக்க மற்றவர்களுஞ்சிடுக்குப் பொடுக்கென்றுமலிருக்க உனக்குத்தலையிறக்கம் வந்ததென்காணும் இப்போ வெகுஞாயம்பேசவந்தாய் போம்போய்விதுரா.

விதுரன்-சகுனிக்குச்சொல்-வசனம்.

ஓய்சகுனிமாமா உன்னாலேதானிக்கசமஸ்தானம் வெட்டவெளிச்சம்பட்டம்பகலாகப்போகுது உன்பேச்சுக்குவரவில்லை நீசும்மாயிரும்.

விதுரன்-திருதாட்டிரனுக்குச்சொல்-விருத்தம்.

பிள்ளைகள்தீங்குசெய்தால் பிதாநல்லபுத்திசொல்லி
தள்ளவேவேணுமந்த தன்மையுன்னிடத்திலில்லை
உள்ளனாலுள்ளமட்டும் வோரவஞ்சனையேசெய்தாய்
எள்ளுந்தண்ணீருங்களை யாருனக்கிறைக்கப்போறார்.

வசனம்

கேளும் அண்ணா திருதாட்டிரமகாராசனே பிள்ளைகள் ஒருபொல்லாங்குசெய்தால் தகப்பன் நல்லபுத்தியைச்சொல்லி அதைத்தடுக்கவேணும் அந்தநடத்தை உன்னிடத்திலில்லை எப்போதும் உன்தம்பிபிள்ளைகளுக்கு ஓர்வஞ்சனையேசெய்தாய் உன்பிள்ளைகள்நாளை எள்ளுந்தண்ணீருமிறைக்கஉதவவேணுமே அண்ணே,

இதுவும்-விதுரன்சொல்-விருத்தம்.

தம்பிபிள்ளைகளுமுந்த தமயன்பிள்ளைகள்கெலித்து
கொம்பனையாளைக்கூட குறித்தாடச்சொல்லலாமோ
வெம்பியுன்மகனுரைத்த வேலையேநடக்குமாகில்
நம்பிடபாசுவ்வாழ்வும் நாசமாய்போகும்சொன்னேன்.

வசனம்.

தம்பிபிள்ளைகள் கூடப்பிறந்த தமயன்பிள்ளைகளடிமையாக்கிக் கொள்ளுகிறது அவர்கள்பெண்சாதியைக்கூடயேது நியமித்து; யடிமையாக்கிக்கொள்கிறது உன்மகன்சொல்லுகிறது உனக்குச்சரியாயிருக்குதா அப்படி நடக்குமானலிந்த ஆதீனத்துக்கு கெடுதிவரும் சொன்னேன் சொன்னேன்.

சகுனி-தர்மருக்குச்சொல்-வசனம்.

தம்பி தர்மபுத்திரா அந்தக்கிழவனும் இந்தக்கிழவனும் யேதோபேசிக்கொள்ளுகிறார்கள் இந்தக்கிழவன்பேச்சு இந்ததிரியோதனை கின்னுராக்காரனுக்கு ஏற்கப்போகுதா துரோபதையைக் குறித்துநாம் ஓராட்டம்போடுவோம் வாரும்.

தருமர்சொல்-வ-ம். அப்படியேசெய்வோம்.

துரோபதையைவைத்தாடுகிறது.

## நான்காவது ஆட்டம்.

சகுனிசொல்-த-ரு-இ-ம்-புந்நாகவராளி-அடதாளம்.

என்மருமகனுக்குநல்லவோ ராட்டம்
எப்படியாகிலுஞ்செலிக்கிறே னிந்தாட்டம்

சகுனிசொல்-வசனம்.

இரண்டுபனிரெண்டுஇரண்டெட்டுஇரண்டரிக்கால்துகைபத்து

துரியோதனன-சகுனிக்குச்சொல்-வசனம்.

ஆஆஆஆஒப் கர்னமகாராஜனே பார்த்தீரா எங்கள் சகுனிமாமன்சொகுசை நானென்னசொல்வேன் ஒய்மாமா உனகையை இப்படிதாரும் என் கண்ணிலே ஒற்றிக்கொள்ளவேணும்.

தருமர்சொல்-தரு.

ஐயையோசொல்லாமசற்குந் தருமமல்ல
அந்தீதஞ்செய்தாலதற்கானென் சொல்ல

சகுனிசொல்-வசனம்.

ஆஆவிளங்கினதேபழுப்பங்கயந்தான்மூணத்தொண்ணுதான்.

நன்மையுமுறுஞ்சில துன்மையிலு மந்த
நாளையிலுமெந்தவேளையும்பார்க்கில் என் மரு

சகுனிசொல்-வசனம்.

மூன்றுபனிரெண்டுமூன்றெட்டுமூன்றறிக்கால்மூன்று துகைபத்து.

தர்மர்சொல்-தரு.

வெய்யானமூர்க்கமும்பொய்யான மார்க்கமும்
விச்சகளுங்கொஞ்சம்பேச்சிகளும்பார்த்தால் ஐயை

தருமர்சொல்-வசனம்-சாலுமுறைழு.

அஞ்சுபேரையுங்கூடசெலித்ததும் பெரிதல்ல
அடிமையாக்கிக்கொண்டதும்பெரி தல்ல
ஆனைகளும்பரிசேனைகளுமவர்
அஸ்திரங்களும்சல்லவஸ்திரங்களும்ரத்ன
ஆரங்களுஞ்சத்தவீரங்களுமவ

வீஷ்மர்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

நமதுகுலம்பிறர்நகைக்குங்குலமேயல்ல
நராதிபருக்கிதுகளெல்லாம்ஞாயமல்ல
சமரசமாய்பாண்டவர்களந்நியரல்ல
சகோதரரைக்கெடுக்கிறதுதருமமல்ல
அமிர்தகுணபாஞ்சாலியற்பமல்ல
அவர்கள்சபிதநாலுன்னைவிட்டுப்போவதில்லை
விமலமில்லாவடதுரியாவையோவிந்த
விபரீதகுணமுனக்குவேண்டாமப்பா.

வசனம்.

ஆஆ அடா துரியோதனா என்னடா நம்முடையகுலம் பிறர்நகைக்கப்பட்ட குலமல்லவே அந்தபாண்டவர்கள் அந்நியர்களல்லவே சகோதரர்களுக்கு ஒரு கேடு நினைக்கிறது தர்மமல்லவே அந்தராசபத்தினியான துரோபதை அற்பசொற்பமல்லவே அவள்வாக்கினாலே ஒன்றுசொன்னால் உன்னைவிட்டுப்போகிறதில்லை ஐயையோயிந்த விபரீதகுணவார்த்தைகள் வேண்டாமப்பா.

துரியோதனன்-வீஷ்மருக்குச்சொல்-விருத்தம்.

பெருக்கமென்னைப்பெற்றவன்திருதராட்டிரன்
ஒருத்தனேயந்தவார்த்தைக்குடன்பட்டடப்பாரிந்த
நரைத்தகிழவரெல்லாம் நானென்று சொன்னதை
இருந்தவெழுகையறச்சொல்ல எப்போதும்வழக்கந்தானே,

வசனம்,

சரி சரி சரி சரி ஆஆ இதிலேகுறைச்சலில்லையே தாகாளுமென்னைப்பெற்றவன திருதராட்டிரமகாராசனே சரி நானெப்படிசொன்னால் அப்படியேகேழ்க்கவும் நடக்கவும்வீஷ்பர் துரோணா என்றுசொல்லப்பட்ட நரைத்தகிழவரெல்லாம் நானென்று சொன்னால் தைவிலக்கிமேலேமுன்மறைச்சொல்லுகிறது வழக்கந்தானே நல்லதாகட்டும்.

துரியோதனன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

சிற்றப்பாசிலபேரை அனுப்பினபவர்
தேசமெல்லாம்தோரணங்கள்கட்டச்சொல்லும்
மற்றவுப்புசட்டிவரைவாடுங்கூட
வைக்காமலெடுத்துவரவே சொல்லு
குற்றமுள்ளஐவரையெழுந்திருக்கச்சொல்லு
கொத்தடிமையானதொழிற்செய்யச்சொல்லு
சித்தினிதுரோபதைசபையிலிப்போ
சீக்கிரமாயழைத்துவரச்சொல்லுவாயே.

வ-ம். அப்பாசிற்றப்பா இனிமேல்முன்பின்யோசனை பண்ணவேண்டியதில்லை சிலபேரையனுப்பி பாண்டவர்கள் தேசமெல்லாம்தோரணங்கட்டச்சொல்லுமவர்கள் வீட்டிலேயிருக்கப்பட்ட உப்புசட்டிவாயோடுங்கூடபாக்கியில்லாமல் எல்லாம் என்வீட்டிலே கொண்டு

வந்துபோட்ச்சொல்லு மிந்தபாண்டவாகளைந்துபேரையுமெழுந்தி
ருக்கச்சொல்லி அரமனைவேலைசெய்யச்சொல்லு மந்தசித்தினிசிறு
க்கியாகிய துரோபதையைங்கே யிழுத்துவரச்சொல்லு மெழுந்
துபோம் சிற்றப்பா.

விதுரன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்

எந்தகாரியஞ்செய்தாலு மெங்களைஎன்செய்தாலும்
அந்தகற்புடையாளான அரிவைதுரோபதையைமன்னர்
மந்திரசபையில்வைப்போ மானமில்லாமற்பேசும்
நிந்தையைமறந்தாயானால் நீடூழிகாலம்வாழ்வாய்.

வசனம்.

அப்பா துரியோதனனே செங்கோல்செலுத்தப்பட்டவன்செங்
கோலுக்குமுன்னேசங்கிதமாகுமா பேரை என்னசொன்னாலுமெ
னை எப்படிச்செய்தாலும் ஆகிலும் தன்மானம் பிறர்மானமென்று
ம்பாருமலத்தமகாகற்புடையவளான துரோபதையை சபையிலே
சின்னமாக இழுத்துபேசுவதே அதுநலமல்ல அதைவிட்டுவிடுவா
யானால் சற்பகோடிகாலம் வாழ்வாயப்பா.

துரியோதனன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

கற்பகன்றாய்சொன்னீர் காலஞ்சுபேருநித்த
செப்பமாய்கூடிக்கூடி திரிந்ததுரோபதையாளுக்கு
கற்பேதுமானமேது கணக்கேதுகாரியமேது
சொற்பனத்திலுமந்த தோகையைமறந்திட்டேனே,

வ-ம். சிற்றப்பாநன்றாகச்சொன்னீர் சுருக்குப்பையிலே அரிவா
ளைவைத்தாப்போலிருக்கிறது நீர்சொல்லுகின்றதுயேதுகாணும் நி
த்தம் ஐந்துபேருடன் கூடப்போகிறவேசி அவளுக்குக் கற்புமான
மா காரியமா கணக்கா பளா பளா அந்தராச்சூயயாகத்திலே என்
னையல்லவா பார்த்துநகைத்தாள் அது என்மனதிலே யிருக்கின்ற
து விடுவேனோ.

விதுரன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

திறமையில்லாவிகட துரியோதனனே
  சேதியொன்றுசொல்லுகிறேன் தெளிவாய்கேளும்
பொறுமைதனிலேயிருந்தபூமிதேவி
  பூமிபாரம்பொறுக்கமாட்டேனென்ன
திறமுடையமாயனுடன்சொன்னாளந்த
  தீர்க்கிறேனென்றுசொல்லிநெடியமாலும்
தரைதனில்வந்தவதரித்தானதற்கேற்றாப்போல்
  சக்கிமுக்கிதட்டாதேசனையப்போறாய்.

வ-ம். கேளுமப்பா துரியோதனா பூமியிலே அக்கிரமம்மிகுந்துபூ
மிதேவியானவள் பூமிபாரம் பொறுக்கமாட்டாமல்மகாவிஷ்ணுவுட
னே முறையிட்டாலந்த மகாவிஷ்ணும் அந்தபூமிபாரத்தை தீர்க்கி
றேனென்றுநம்மிலே ஒருவனாகவந்து அவதரித்திருக்கிறார் ஆகை
யினாலேயேதோ ஒருவிபரீதம விளையப்போகுது அதற்கேற்றாப்

(பாலேலநீயுஞ் சக்கிமுக்கிப்போகிறாய் வேண்டாம் மோசம்வருஞ் சொன்னேன் சொன்னேன்.

துரியோதனன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்.

பின்னையுநலமேயந்தப் பிரகாரம்நடக்குமானால்
தின்னுஞ்சக்கரைப்பந்தல்மேல் தேன்மாரிபொழிந்தபோல்தான்
சொன்னிடப்பிடப்போய்தெய்வங் குறுக்காகவந்துபோல்தானே
துங்கிகர்நினைத்தகாரியஞ் சுறுக்காகநடத்துவேனே,

வசனம்.

ஆஆஆஆ பின்னையுஞ்சந்தோஷந்தான் அப்படியேநடக்குமானால் சர்க்கரைப்பந்தலிலே தேன்மாரி பொழிந்தாற்போல தன்னானால் நான் நினைத்தகாரியத்தை எல்லாஞ்சுறுக்காய்முடிப்பேன்

துரியோதனன்-பிரதிகாமியனுக்குச்சொல்-விருத்தம்.

பிறிச்சதுதானப்பா பிரதிகாமியனேவாடா
கறிச்சநீள்மரங்கள்போல சபையிலேநிற்பதாக
பறிச்சபாண்டவர்களின்று பகடையில்வைத்துதோற்ற
முறிச்சிறிக்கியைநீபோய் முகத்துமுன்னிழுத்துவாடா.

வசனம்.

அடா பிரதிகாமியனேவாடா இங்கே பாண்டவர்கள் சபையிலேவந்து தோற்றார்களே அந்த முறிச்சிறிக்கியை இங்கேயிழுத்துக்கொண்டுவாடா.

பிரதிகாமியன்-துரியோதனனுக்குச்சொல்-கவி.

கற்புதமென்னுதற்புயமன்னா
பொற்புடன்சொன்னசொற்படிசெய்வேன்.

பிரதிகாமியன்போய் திரும்பிவந்து துரியோதனனுக்குச்சொல்கவி

திடம்பெறுமன்னா அடர்ந்தனனங்கே
தொடர்ந்தொருவழக்கு நடந்ததுகேளும்.

வசனம்.

அழைக்கப்போனவிடத்திலே நடந்ததைக்கேளும் சுவாமி.

துரியோதனன்-பிரதிகாமியனுக்குச்சொல்-கவி,

கந்நியையிழுத்துக்கொண்டு முன்னமேவாச்சொன்னால்
துன்னியவழக்குண்டென்று என்னடாசும்மாவந்தாய்.

வசனம்.

துரோபதையை யிழுத்துக்கொண்டுவரச் சொன்னாலென்னடா வழக்கென்றுசொல்லவந்தாய்.

பிரதிகாமியன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

என்னைமுனந்தோற்றபின்பு எழிலைவர்தோர்த்திட்டாரோ
பின்னுமைவர்தோற்று பிறகென்னைத்தோர்த்திட்டாரோ
முன்னமேயென்னைத்தோர்த்தார் மொழியுண்டேயிங்கேதோர்த்தால்
அந்தநீதிமெய்யழக்கை யிக்குமோவாசற்கென்றாள்.

வ-ம். என்னைமுன் தோர்த்து பிறகு ஐந்துபேர்களுந் தோர்த்தார்களோ ஐந்துபேருந் தோர்த்து அதின்பிறகென்னைத்தோர்களோ

அப்படியில்லை முன்னாடி என்னைதோர்த்தால்பேச்சுண்டு ஐந்துபேருந்தோர்த்தபிறகு என்னைத்தோர்த்தபடியினாலே அதுநியாயமல்ல அந்தச்சபையிலே அழைக்கிறது தருமமல்லவென்று அந்தம்மாள் சொல்லுகிறாள்சுவாமி.

துரியோதனன்-துற்சாதனனுக்குச்சொல்-விருத்தம்.

கொம்பிலேகொம்புபட்டு குதிரைக்குமுளைத்ததென்றால்
நம்பும்பாண்டவரைப்போல நம்மையுமெண்ணிக்கொண்டாள்
தம்பிதுற்சாதனனே தாண்டிலேநீபோயந்த
வம்புதுரோபதையையிங்கே மயிர்பிடித்திழுத்துவாடா.

வ-ம். அடா துற்சாதனனேகேட்டையா அந்தசிறுக்கிகொண்ட அகம் முன்னேதோற்றவர்களென்று பின்னேதோற்றவர்களென்று மொருவழக்குண்டாக்கிறாள் குதிரைக்குகொம்பிலே கொம்புமுளைத்ததென்றால் தனனுடைய வெச்சக்காரர்கள் நம்புவார்களே அப்படி நம்மையுமெண்ணிக் கொண்டாப்போலிருக்கிறது அவளைப்போய்மயிர்பிடித்து இழுத்துவாடாதம்பி.

துற்சாதனன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

தாட்சண்யமெண்ணமாட்டேன் தயவையுமெண்ணமாட்டேன்
நாட்சென்றவைரமெல்லா நானிப்போதீர்த்துக்கொள்வேன்
வாட்சென்றமன்னரெல்லா மருவியகோவின்முன்னே
சூட்சியாய்கொண்டுவந்து சுறுக்கினில்விடுவேனண்ணே.

வ-ம். அண்ணே கண்ணியமுள்ளவர்கள் முகத்தைக்கூடபார்க்கமாட்டேன் இந்த அடியிலே அவளையிழுத்துக்கொண்டுவந்துவிடுகிறேன் பாருமண்ணே.

துற்சாதனன்-சொல்லிக்கொண்டுபோகிற-தரு.

இ-ம்-மோகனமிசுரதாளம்-பல்லவி.

அப்படியவள்சொல்ல லாச்சேஎங்க
ளடிமையாய்ப்போனபின் பேச்சா

அநுபல்லவி.

தப்பிலிசிறுக்கியைதவிடாகக்கொழிக் கிறேன்
தடுத்துச்சொன்னால்வாயை பிடித்துக்கிழிக்கிறேன்-அப்ப

சரணங்கள்.

புலியெப்பூனைகள்தந்து வெல்லுமா-இவள்
சொங்கெல்லாமினியெங்கே செல்லுமா
நலியமயிர்பிடித்துநானே யிழுக்கிறேன்
ஞாயமெடுத்துச்சொன்னால்நாக்கை யறுக்கிறேன்-அப்ப
செகதமாடும்பல்லைத் தினனுமா இவள்
சித்திரமினியெங்கே மின்னுமாஎந்தன்
சத்தங்கேட்டவுடனவந்தாலே பார்க்கிறேன்
தடங்கல்சொன்னால்சக்கனையாய் போக்கிறேன்-அப்ப

பெண்பெண்சாதிக்கிந்த வார்த்தையேலுகோ
பிரதிகமியனே நீ பார்த்தையா
என்படுவேசியையிப்போ தழைக்கிறேன்;
இகலெடுத்துச்சொன்னான் சிகைபிடித்திழுக்கிறேன் - அப்ப
துர்ச்சாதனன் - துரோபதைக்குச்சொல - விருத்தம்.

மதித்ததுரோபதையேநீதான் மானமுள்ளவளேயானால்
விதித்தநூற்றொருவரன்பு வேணுமென்றவளேயானால் ன்று
கொதித்தவெண்ணண்ணனுன்னை கொலுவினிலழைக்கச்சொ
எதிர்த்துத்தாஞ்சொல்லாமலெழுந்திருந்தென்பின்வாராய்

வ-ம். கேளாய்துரோபதையே நீநல்லமானமுள்ளவளேயானால்எ
ங்களண்ணன் கொலுவுக்கு சீக்கிரமாகவா

துரோபதை - துர்ச்சாதனுக்குச்சொல் - கொச்சகம்
இ-ம்-புன்னாகவராளி.

மட்டுமருங்குமரியாதையில்லாமல்
பொட்டெனவேவந்தழைத்த புத்தியில்லாமைத்துனரே
தொட்டமுடியுங்களண்ணன் சூழுஞ்சபையிலென்னை
இட்டுவரச்சொன்னவிதம் இன்னதென்றுசொல்லீரே.

வசனம்

மருங்குமரியாதையில்லாமல் வந்தழைத்த மைத்துனரே இரா
ஜாராஜாக்களிருக்கப்பட்டசபையில் உங்களண்ணனென்னை அழைத்
துவரச்சொன்னவிபரம் இன்னதென்று தெரியச் சொல்லவேணும்
மைத்துனரே.

துர்சாதனன் - துரோபதைக்குச்சொல் - கொச்சகம்
மன்னியதருமபுத்திரன் வலியசூதாடியையோ
முன்னிலைநகரம்நாடு முழுதுமேதோற்றான்பின்னே
தன்னையுந்தோற்றான்தம்பி மாரையுந்தோற்றான்பின்னே
உன்னையுந்தோற்றானெல்லா மொடுங்கினான்வந்துபாராய்.

வ-ம் என்னத்தைச்சொல்லுகிறது தர்மராசா ஒருஆட்டஞ்சொக்
கட்டானுடுவோமென்று சொன்னான் அதாயக்கு யோக்கியமல்லவெ
ன்றுசொன்னோம் அப்படியல்லவென்று ஆடிநாடுநகர முதலானது
களெல்லாந்தோற்றானப்பால் தம்பிமாரையுந்தோற்றான் பிறகு தன்னையு
ந்தோற்றான் கடைசியில் உன்னையுந்தோற்றான் ஓடிப்பாடி ஒடுங்கி
உட்கார்ந்துக்கொண்டிருக்கிறானவர்களை வந்துபார்த்துவருவாய்வா

துரோபதை - துர்சாதனுக்குச்சொல் - விருத்தம்

என்னையுஞ்சொக்கட்டானி லிசைவேவைத்துதோற்ற
மன்னவரெமக்குச்சொல்லி வாவழைத்திடவர்கண்டாய்
உன்னையார்கண்டாருங்க ளண்ணனையார்தான்கண்டார்
பின்னமாய்பேசவேண்டாம் பேசாமல்நடந்திடாயே.

வ-ம். என்னைசூதாடிதோற்றஎன் பிராணநாயகர் என்னைவரவழை

ப்பார் உன்னையார்கண்டார் உங்களண்ணனையார்கண்டார் அதிகமாய்பேசவேண்டாம்நடநட.

துற்சாதனன்-துரோபதைக்குச்சொல்-விருத்தம்

நடக்கதான்வந்தேனிப்போ நாழிகைதரிலையுன்னை
அடக்கதான்வந்தேனுங்க ளண்ணர்முன்கொண்டுபோயி
விடுக்கதான்வந்தேனந்த வேந்தர்கள்சபையில்வெட்கங்
கெடுக்கதான்வந்தேனந்த கெற்வமேனெழுந்துவாடி

வ-ம். நடக்கவா நடக்கவும்உன் கெர்வத்தை அடக்கவும்எங்களண்ணர்முன்னே கொண்டு போய்விடுக்கவும் அந்தச்சபையில் வெட்கத்தைகெடுக்கவுந்தான் வந்தேனறியாயோவென்னை

துரோபதை காந்தாரிக்குச்சொல்-விருத்தம்.

மாமிநீபாராயுந்தன் மகன்செய்யுமனியாயத்தை
தாமதமன்னர்சூழுஞ் சபைதனில்வரவேசொல்லி
காமிகன்போலேயுந்தன் கைபிடித்திழுக்கவாரான்
பூமியிலிதனைப்போல பொல்லாதகொடுமையுண்டோ.

வ-ம் ஆ மாமி இந்த அநீதமுண்டா அந்தராசசபைக்குவரச்சொல்லி உன்மகன்கையை தொட்டிழுக்கவந்ததைப்பார்த்தையாமாமி.

துற்சாதனன்சொல்-விருத்தம்

கொடுமையென்றுரைத்தாய்நீங்கள் கொத்தடனெங்களுக்கு
அடிமையாய்போனால்நாங்க ளாளாமல்விடுவனுண்டோ
கடுமையாயென்தாய்பின்போய கட்டிக்கொண்டதினாலே
விடுவனோஉன்னைசும்மா யிழுக்காமேதஓடிவாடி.

(வ-ம்) கொடுமையென்னடி சும்மாகூறுகிறாய் நீங்கள் ஆண்பெண் அடங்கலும்எங்களுக்கு கொடுத்தடிமையாய் விட்டால்சும்மாவிடுவதுண்டோஎங்களுடையதாயைப்போய்கட்டிக்கொண்டதினாலே விட்டுப்போவேனோ வாடிவா



துரோபதை காந்தாரியிடத்தில்-புலம்பல்-தரு.

இ-ம்-சண்டா-மீசாதாளம்-கண்ணிகள்

அய்யய்யோநானென்னசெய்வேன மாமி-இக்க
அனியாயந்தானுண்டோ மாமி
செய்யும்வாரோதுசன் மாமி-எந்தன்
சிந்தைகலங்குதே மாமி
தஞ்சமுநீயேயென் மாமி-பெற்ற
தாய்க்குநீயேயென் மாமி
வஞ்சனைசெய்யாதே மாமி-என்
மானங்காக்கவேணும் மாமி-இவனைக்
கண்டவுடனேயென மாமி-எந்தன்
கால்களுநடுங்குதே மாமி-உன்
அண்டையில்வந்தேனே மாமி-என்னை
ஆதரிக்கவேணும் மாமி-நீ
காட்டிக்கொடாதேதான் மாமி-என்னைக்
காப்பாற்றவேணுமே மாமி-உந்தன்
வீட்டினில்வந்தேனே மாமி-என்னை
வெளியிலேதள்ளாதே மாமி-நல்ல
பெண்ணாய்ப்பிறந்தாயே மாமி-என்போல
பெண்ணையும்பெற்றாயே மாமி-இந்த
மண்ணுளுமேவந்தற்கு மாமி-இது
மரியாதையாசொல்லு மாமி-நானு
பிள்ளைகளைப்பெற்று மாமி-என்னைப்
பேதகஞ்செய்யாதே மாமி-என்னை
தள்ளிவிட்டாலேயே மாமி-இன்னா
தள்ளிக்கொண்டேபோவான் மாமி-இப்போ
நம்பினேனுன்னையே மாமி-என்னை
நகைப்பண்ணாதேதான் மாமி-சும்மா
வெப்புதேயென்னுள்ளம் மாமி-இந்த
வேளைகாக்கவேணும் மாமி

காந்தாரி-துரோபதைக்குச்சொல்-விருத்தம்

காதங்கர்சென்றேயோடி கணவனைக்கட்டிக்கொண்டு
ஓசையாலமுதீயே யுன்னையல்லாமல்வேறேயுண்டா
வாதையைக்குணன்மார்யற்று மாமன்மாருற்றார்பெற்றார்
ஏகமாய்நிறைந்தசபைக்கு ஏகவொண்ணாதேதாபோடி

(வ-ம்) அடிகுடுப்பா என்னடி ஆம்பிடியானையறியாமல் ஆயிரம் பேருடனேபோகிறவளொருத்தியாம் அவள்காதங்கர் என்றுசத்தினால் அங்கேனேயோடி கணவனை அப்பாவென்று கட்டிக்கொள்ளுவாளாம் அவளேபோ அதற்கென்னமாமன் மைத்துனன் உற்றார்பெற்றாரிருக்கிறசபைக்குப்போகிறதற்கு என்னடிபோடிமாதங்கி.

துற்சாதனன்-துரோபதைக்குச்சொல்-விருத்தம்.

பிழையுடன்தினமுமைந்து பேருடன்போரவேசி
தாழையுறுமன்னர்கூடுஞ் சபைக்குநீவரப்போகாதோ
குழையுறாய்குழைந்துசும்மா ஞானுக்குறாய்செல்வங்கொஞ்சி
இழையுறாஎன்னையுன் வைத்துநானறவேன்வாடி.

(வ-ம்) அடி ஒருத்தரல்லவே ஐந்துபேருடனே நாள்தோறும்இணங்கிகுளிர்விட்டுப்போனதாசிதானேசரி "எங்களண்ணன்முன்னே வரலாகாதாகுழைஞ்சிப்போறாயென்னடி நானிந்தவித்தையெல்லாம் அறிவேன்வாடி.



துற்சாதனன் துரோபதையை தொடவந்தபோது துரோபதை

புலம்பல்,

| | |
|---|---|
| துரோகியிதுவென்ன | சொல்லடா-என்னை |
| தொடவேண்டாம்நீதூர | நில்லடா |
| துரோகிஎன்தர்ம | துரைகளறிந்தாக்கால் |
| தூக்கிப்போட்டுசொன்னாக்கை | யறுப்பாரே-துரோ |

துற்சாதனன்சொல்லல்.

| | |
|---|---|
| தொட்டிழுக்காமல்நான் | போவேனோ-போனால் |
| துரியோதனன்தம்பி | யாவனோ |
| பட்டியுன்பாண்டவர் | பரதேசியானாரே |
| படிவாங்கிசோறுண்டடிமையாப்போனாரே | தொட் |

துரோபதைசொல்லல்,

| | |
|---|---|
| சங்கடமிங்கே | படிக்கிறாய்உந்தன் |
| சமர்த்தெல்லாஞ்சொல்லி | அடிக்கிறாய் |

முக்காலுங்காக          முழுகிக்குளித்தாலும்
கொக்காகுமோபோடா          வக்காகுமோ அடா துரோகி

துற்சாதனன் சொல்லல்.

என்னடி எண்ணாமற்          பேசுறாய்-உனக்
கேற்றபடியெல்லாம்          வீசுறாய்
மன்னியுன்னிக்காலே          பின்னிரணிக்கொள்ள
சின்னபின்னமாக          முன்னும்பின்னுமாக-தெள

துரோபதைசொல்லல்.

முழுதுமெண்ணாமல்நீ          யலைகிறாய்வெறி
முண்டைநாயைப்போலே          குலைக்கிறாய்
கழுதைக்குபதேசங்          காதிலேசொன்னாலும்
அவயக்குரலில்லாமலங்கில்லையென்சொல்வர்          துரோகி

துற்சாதனன்சொல்லல்.

ஆட்டத்திலேனைவைத்து          தோற்றீரேநீங்கள்
அடிமையாய்ப்போனதும்          பார்த்தாரே
ஆட்டிநீட்டிப்பூச்சிக்காட்டிச்சொல்லா          தேயென்
வீட்டுக்குச்சொந்தவெள்ளாட்டியாய்ப்போனபின்          தொட்

துற்சாதனன்-துரோபதைமயிரைத்தொட்டபோது துரோபதை
புலம்பல்-இ-ம்-கெண்டா-மிசுரதாளம்.

ஐயையோபாவிதெய்வமேயிந்த
வனியாயந்தானுண்டோ          தெய்வமேஎந்தன்
மன்னவர்கோதிமலர்சூடுங்கூந்தலை
மடையவன்தொடலாமோ          தெய்வமேஎந்தன்
போர்வீரர்தொட்டுபுகழுமென்கூந்தலை
புலையவன்தொடலாமோ          தெய்வமேஎந்தன்
கண்ணாளர்தொட்டுகலைக்குமென்கூந்தலை
மடையவன்தொடலாமோ          தெய்வமேஅந்த
முனைவீரர்தொட்டுமுடிக்கின்றகூந்தலை
மூடன்தொடலாமோ          தெய்வமேநல்ல
சுத்தவீரர்மலர்சூடுமென்கூந்தலை
துஷ்டன்தொடலாமோ          தெய்வமேநல்ல
மல்லிகைசூடிமணக்கின்றகூந்தல்
மண்மேற்புரளுதே          தெய்வமேநல்ல
சம்பங்கியெண்ணெய்தடவியகூந்தல்
தரையிற்புரளுதே          தெய்வமேநல்ல
சீப்பிட்டுவாரிதிகழுமென்கூந்தல்
தெருவிற்புரளுதே          தெய்வமேநல்ல

துற்சாதனன்சொல்-விருத்தம்.

பஞ்சவர்கைகளுன்மேற்பட்டமாத்திரத்திற்பொல்லா
வஞ்சகியுன்னுடம்புமணக்குமோவளர்ந்துபோமோ

பிஞ்சியென்கைபட்டாலுன்மினுக்கெலாங்குலைந்துபோமோ
அஞ்சுடனுருகட்டிமெதற்கென்னையெழுந்துவாடி.

வசனம்.

ஓஓ என்னடி உன்னுடையவெச்சக்காரரைந்துபேருடையகை உன்மேனியிலேபட்டமாத்திரத்திலே மகாகமகமவென்றுமணக்குமோ மிஞ்சிபூரிக்குமோ மிஞ்சிஎன்கைபட்டால் உன்றேவடியாள்மினுக்கெல்லாஞ்சிந்திப்போமோ அதற்கென்ன ஐந்துபேருடனுருவதாகட்டுமெழுந்துவாடிவா.

துரோபதைசொல்தரு-இ-ம்-சங்கராபரணம்
அடதாளம்-கண்ணிகள்.

பேசாதெல்லாம்பேசிப்பேய்போலத் துள்ளுகிறாய்
பெண்கள்மெச்சபெருமையைக் கொள்ளுறாய்
நீசனேநீதத்திநிலத்தில் விழுகிறாய்
நிந்தையென்றெண்ணாமல் நெருப்பில்விழுகிறாய்
போத்தனே துஷ்டகாதகனே கெட்ட
சாதகனே நனபாதகனே அடாசீச்சீபினத்தாதே
அடாதுஷ்டாசீச்சீபினத்தாதே

துற்சாதனன்சொல்-தரு

மெத்தமெத்தகுளறிவிழுகிறா யென்னடி
மேல்வரவொண்ணாமல்பேசுறா யென்னடி
கற்றசமர்த்தெல்லாங்காட்டுகிறா யென்னடி
கண்ணீருதிர்த்துக்கதருறா யென்னடி
சித்துக்கள்ளிப்போடி யெத்துக்கள்ளியிந்திர
சித்துக்கள்ளியடிவித்தைகள்ளிசும்மாகடந்துவாடிவாடி.
கொலுவுக்குநடந்துவாடிவாடி

துரோபதைபுலம்பல்-இ-ம்-எதுகுலகாம்போதி.
ஆதிதாளம் கண்ணிகள்.

ஐயையோபாவிதெய்வமேநானிந்த
அவதிபடவிட்டாயோ தெய்வமே
ஐவர்க்குங்கைகொடுத்து அருமையாயிருந்தேனே
அதற்காகவிப்படிசெய்தாய் தெய்வமே
மணவாளருடன்கூடி மகிழ்ச்சியாய்விளையாடி
வலக்காரமாயிருந்தேனே தெய்வமே
வந்தவிடந்தனிலே இந்தவிதியெனக்கு
வருமென்றுஅறியேனே தெய்வமே

துற்சாதனன்சொல் விருத்தம்

வந்திடுமிடத்திற்பொல்லா மாரீசக்கள்ளியப்பு
சிந்திப்போனதுதானென்ன சிணுங்கியழுவதென்ன
முந்திவில்வளைத்தபோது முடிமன்னர்சபைக்குநீதான்
வந்ததுமில்லையாசும்மா மசக்கிறுயெழுந்துவாடி.

துரோபதைசொல்-கண்ணி.

மயிரைப்பிடிக்கிறாய்    மண்மேலேயிழுக்கிறாய்
வம்புகள்பேசியின்வாயேன்    புழுக்கிறாய்
உயிரைப்பறிக்கிறாய்சூட்டாரங்    காட்டுகிறாய்
ஒருக்காலேயேன்சும்மாயொடித்து    முறிக்கிறாய்
ஓகோகெடுவாய்ஐயோகெடுவாய்    ஐயோபோடா
படுபாவிஉனக்கென்னகோபாங்காலமோபாவி

துற்சாதனன்சொல்-கண்ணி

விண்ணாணம்பேசியினுக்கிறா    யென்னடி
வேசிகள்போலகுலுக்கிறா    யென்னடி
ஒண்ணுனலெட்டாய்முடியுறா    யென்னடி
ஓகோகசும்மாநொடிக்கிறா    யென்னடி
தட்டாதேசும்மாகிட்டாதேயடி
பேசாமல்நீவாடிகொலுவுக்குப்பேசாமல்நீவாடி

துரோபதைபுலம்பல்-தரு-இ-ம்-கண்டாமீசுரதாளம்

பல்லவி

ஆவிதியேஐயையோ    விதியே

அநுபல்லவி

பாவிநானென்னபாதகஞ்    செய்தேனோ-இந்த
பாவிகையில்சிக்கிபரதவிப்பதும்    ஆவிதி

சரணங்கள்

ஆருக்குநானொரு அக்கிரமஞ்செய்தேனோவிதியேநான்
ஆரையடித்துவலங்கோலஞ்செய்தேனோ    ஆவிதி
பாரினில்இந்தப்பாடுபடவேநான்
பஞ்சபாண்டவருக்குபாரியாளானதும்    ஆவிதி

துற்சாதனன்சொல்-விருத்தம்

நீலிகளானபேர்க்கு நிறைமயிலேகண்ணீரென்பார்
ஓலமிட்டழுமுனக்கு உடம்பெல்லாங்கண்ணீர்கண்டாய்
கோலங்கீழ்நுழையுமெந்தன் குணத்தையுமறிந்துயிந்திர
ஜாலஞ்செய்யாதேசும்மா தருக்காதேஎழுந்துவாடி

வசனம்,

ஆ ஆ நீலிக்கிநிறையிலேகண்ணீரென் றுசொல்லுகின்றது உனக்குஉள்ளங்கால்முதற்கொண்டு யுச்சந்தலைவரைக்கும் கண்ணீராலுல் அந்தநீலியும் யுனக்கிணையல்ல சும்மா அழுகிறால் உன்னைவிட்டுபோவேனோ நீ பாயின்கீழே நுழைகிறவளானால் நான் கோலத்தின்கீழ்நுழைகிறவனென் றறியாயோடி வாடிவா

துரோபதை-சொல்-கண்ணி,

பெண்ணுடன்கூடப்பிறந்தது    மில்லையோ
பெண்சாதியைவைத்துவாழ்ந்தது    மில்லையோ

நன்னருள்சுற்றந்தாயாளமு மில்லையோ
தாயார்வயிற்றிற்பிறந்தது மில்லையோ
பட்டவினைதுயரிட்டவினைமுறை
விட்டவினைகெடுகெட்டவினை ஆடாபோடா படுபாவி

துற்சாதனன்சொல்-கண்ணி.

மாட்டுக்காரப்பையல்போலெண்ணிப் பேசாதே
மாதங்கிநீசும்மாவீச்செல்லாம் வீசாதே
நீட்டியாட்டியுந்தீட்டெல்லாங் காட்டாதே
நிமிஷம்போனால்மானம்நிலைநிற்க மாட்டாதே
தளுக்காதேபேய்போல்குலுக்காதேகொஞ்சி
குலுக்காதேமிஞ்சிப்பலுக்காதேயடி
பேசாமல்நீவாடிகொலுவுக்குப்பேசாமல்வாடி

துரோபதைபுலம்பல்.

ஆவிதியே ஐயையோவிதியே
என்போலும்பெண்களுக்கிடரென்னசெய்தனையே விதியே
இதுவுந்தன்தலையிலெழுதினப்படிதானோ விதியே
இன்பமாய்பாஞ்சாலனென்னைப்பெற்று
எடுத்துவளர்த்ததுமிதற்காகத்தானோ ஆவிதியே
வல்லாவிவாயிலேதவளைபோலானேனேவிதியே வேடன்
வலையிலகப்பட்டமான்போலுமானேன் விதியேயிந்த
பொல்லாதநிர்மூடப்புலையன்கையில்சிக்கி
புலம்பிப்புலம்பிசும்மாய்புலம்பித்தவிப்பது ஆவிதியே

துற்சாதனன்சொல்-விருத்தம்.

விதிவல்லவிதியேயானால் வில்வளைத்திட்டபோது
மதியிலென்னண்ணனுக்கு மணமாலைசூட்டிடாயோ
கெதியில்லாபாண்டவரை கெதியென நம்பிக்கேட்டால்
இதினுடன்போமோபின்னை யிருக்கிறதனைத்தும்வாடி

வ-ம், ஆ ஆவிதியினாலென்னயிருக்குதடி எல்லாம் மதியினாலிருக்கிறது ஆதியிலேவில்வளைத்து மாலையிடுகிறபோது இந்த அர்ச்சுனராசனுக்குப் போட்டமாலையைநாங்களண்ணனான துரியோதனமகாராசனுக்குப்போட்டுவிட்டால் இத்தனைபாடெல்லாம வருமே பாண்டவர்கள் பாண்டவர்களென்று பாண்டவரைநம்பி கேட்டபடியினாலே இதுவுடனேபோச்சுதா இன்னமனேகமிருக்கிறது எழுந்துவாடிவா,

துரோபதைசொல்-கண்ணி.

பாண்டவராலேநீபட்டு விழுவாயென்
பாவமிடுந்தீபாழாகவே போவாய்
[illegible]ண்டநரகத்திலழுந்திக் [illegible]
[illegible]

அலைக்காதே கெர்வம் நிலைக்காதே பேய்போல்
மலைக்காதே நாய்போல் குலைக்காதே
போடா படுபாவி உனக்கென்ன போங்காலமோ பாவி

துற்சாதனன் சொல்-கண்ணி

பாண்டவர் பக்ஷபகலை முழுங்கது
பழியெல்லாமுன்தன் தலைமேல் விழுந்தது
தாண்டி என்னுள்ளம் தணலா எரியுது
சபையிலே நீ வந்ததெல்லாந் தெரியுது
வடிக்காதே வீங்கி துடிக்காதே கல்வி
நொடிக்காதே சொல்லி துடிக்காதேயடி
நடந்துவாடி வா கொலுவுக்கு நடந்துவாடி வா

துரோபதை புலம்பல்-இ-முகாரி-ஏகதாளம்-கண்ணிகள்

ஓகோ பாவி இதென்ன கொடுமையோ வையையோ மன்னர்களே-ஒரு
கோதில்லா மன்னர்கள் நீதியிதானோ மன்னர்களே
வாகோயிதுவோ மனுநீதியாவையோ மன்னர்களே-அபி
மானமுஞ் செங்கோல் நிதானமுமில்லையோ மன்னர்களே
பெண்களைப் பெற்ற பெரியோர்களில்லையோ மன்னர்களே-என்னை
பேதகஞ் செய்தால் பெண்பாதகமல்லோ மன்னர்களே-ஒரு
பெண்ணுடன் கூடப் பிறந்தவரில்லையோ மன்னர்களே-ஒரு
பெண்ணாய்ப் பாரினில் பிறந்தது நான்தானோ மன்னர்களே
மனையாளுடன் கூடி வாழ்வாருமில்லையோ மன்னர்களே-பெண்
மானமென்றால் யார்க்கும் மானமோ அல்லவோ மன்னர்களே-இந்த
அநியாயம்போலே புவனியிலுமுண்டோ மன்னர்களே-இது
அரசாட்சி செய்யும் அரசர்க்கு தர்மமோ மன்னர்களே-எங்கள்
ஐயா துரோணரே அசுவத்தாமரே என் ஐயமாரே-இந்த
அநீதம்போலே வையவனியிலுமுண்டோ ஐயமாரே-இந்த
பொல்லாத வார்த்தை புராணம் படித்தேயென் ஐயமாரே-இந்த
பொல்லாங்கைபோலவே பூமியிலுமுண்டோ ஐயமாரே-இந்த
வையகம் போனாலும் வாழ்வெல்லாம் போனாலும் ஐயமாரே-இந்த
மன்னர் சபையிலென் மானம் போகலாமோ ஐயமாரே
மெய்யான மாமனுவிக்கியானந் தெரிந்தவன் ஐயமாரே-என்
மேலென்ன குற்றம் விளங்கக் கண்டீரோ என் ஐயமாரே
பாரம்பரவும் பலவுந் தெரிந்த பெண் பாட்டனாரே-இந்தப்
பாவி கொடுமையைப் பார்த்திருக்கின்றீரோ பாட்டனாரே
தாமமென்றில்லாமல் தள்ளிவிட்டீர்களோ பாட்டனாரே
தன்மையினால் தயை தாட்சண்ணியமில்லையோ பாட்டனாரே உங்கள்
அன்பிலாப் போனாலும் பெண்பாவம் போகுமோ பாட்டனாரே
அரைக்கொடியோனுரைத்திடும் வார்த்தைக்கும் பாட்டனாரே
யுடைபட்டுருக்கவென்னுள்ளங்குளிர்ந்தோ பாட்டனாரே

ஆதரவாகயழைத்துவந்தீரேயென் மாமனே-எந்தன்
அபிமானம்போகவலையிட்டீரே என் மாமனே
மகாதிகாகுருநீயென்றிருந்தேனே மாமனே-என்னை
மன்னர்சபையில்வரவழைத்தீரேயென் மாமனே
குருகுலமன்னர் குலமுறைகண்டேயென் மாமனே-யுங்கள்
குலத்தினிலித்தகொடுமைபடிக்குமோ மாமனே
பெரியோரிருந்தும்பிழைகளைசெய்ததாலே மாமனே-மழை
பெய்யுமோமாவையகமுய்யுமோமாலையையோ மாமனே

பொதுவிருத்தம்-இ-ம்-மேதாடி

கொஞ்சமுமிரக்கமில்லாக் கொற்றவன்சபையினுள்ளே
தஞ்சமெனயவரில்லாமல் தரையிலவீழ்ந்தழுதுபாஞ்சாலி
கஞ்சமென்முகங்கள்வாடி கைகட்டியெதிரேநிற்கும்
பஞ்சபாண்டவரைப்பார்த்து பதறுவாள்கதறுவாளே

வ-ம. அதேதெப்படியென்றால் தயைதாட்சணியம்சற்றுமிரக்கம் யாதுமில்லாத துரியோதனன்சபையிலே துரோபதைபுரண்டழுது பாண்டவர்களைப்பார்த்து தெய்வத்தை நினைந்து புலம்புகிறவிதங்காண்க,

துரோபதைபுலம்பல்-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்-கண்ணிகள்

என்னசெய்வேனினிஎப்படியாறுவேன் தெய்வமே-ஓகோ
என்பிராணநாதருக்கிப்படிவந்ததோ தெய்வமே-ஒரு
அஞ்சியஞ்சகதுரோகமறியோமே தெய்வமே-ஓதர்ம
துரைகளுக்கித்தனை துன்பம்வரலாமோ தெய்வமே-ஐயோ
சத்தியமில்லையோதர்மமுமில்லையோ தெய்வமே-ஓநிமை
சத்தியமும்நல்லதர்மமும்பொய்த்ததோ தெய்வமே-ஓநல்ல
புத்திநெறியில்லாப்புல்லர்க்குகாலமோ தெய்வமே-ஓஅந்த
புல்லர்நடத்தைக்குபூமிபொறுக்குமோ தெய்வமே

பாண்டவர்களைப்பார்த்துப்புலம்பல்,

இன்னவயதில்தேடிமாலையிட்டீர் பாவிகளா-இப்போ
தெருவில்நிலைக்கவிட்டீர்களே பாவிகளா-என்னை
கன்னிவயதிற்கலியாணஞ்செய்தீரே பாவிகளா-யின்று
காட்டிக்கொடுத்துநடக்கப்போய்நின்றீரே பாவிகளா-என்னை
மானக்கிளிபோலவைத்திருந்தீர்களே பாவிகளா-எந்தன
மானங்குலையமரம்போலநின்றீரே பாவிகளா-ஒரு
வர்ணக்கிளிக்குபால்வார்த்துவளர்த்தீரே பாவிகளா-பூனை
வாய்க்கிரைகொடுக்காப்போலாக்கிவிட்டீர்களே பாவிகளா-உங்
வீரம்குறைந்ததோ வில்லுமுறிந்ததோ பாவிகளா-இந்த
மெய்கெட்டவேந்தன்முன்கைகட்டிநின்றீரே பாவிகளா-நல்ல
தாரத்தைத்தாச்சபையிலேதோத்தாலும் பாவிகளா-உங்கள்
தாதுஷகவிரதனத்தையுந்தோத்தீரோ பாவிகளா-தங்கள

இங்கே உன்னைவிட்டுக்கொண்டுவந்ததில் உன்மானத்துக்குக்குறைவு வந்துவிட்டதா என்னடி சும்மா அழுதழுது ஒழுகிப்போகிறாய் கைகண்டதாசிக்குக்கண்ணீரில் குறைச்சலா நில்லடி நில.

விகர்ணன்சொல் - விருத்தம்.

பண்ணாற்றும்பாவைதனைப் பங்கமாய்ப்பேசக்கேட்டு
பெண்ணாற்றுக்கெரிந்தோரெல்லாம் பேசாமலிருக்கலாற்றீர்
தொண்ணூற்றொன்பதுபேர்பின்னே தோன்றியவிகர்ணன்சொல்ல
தொண்ணூற்றுவார்த்தையுங்கட் கேற்குமோவந்திடாதே.

வ-ம், கேளுங்கள் ராசாக்களே மகாபதிவிரதையான துரோபதையை இந்தச்சபையிலே பங்கமாய்ச்சொல்ல அதைக்கேட்டு எல்லாந்தெரிந்த பெரியோர்களெல்லாரும் ஊமைபோல வாயைமூடிக்கொண்டு சும்மாவிருக்கிறீர்களே துரியோதனன்முதலாகிய தொண்ணூற்றொன்பதுபேருக்குப்பின்பிறந்த விகர்ணனாகிய ஒருசிறுவன் சொல்லும்வார்த்தை உங்கள்செவிக்குவேற்குமோ ஏற்காது ஆகிலுஞ்சொல்லுகிறேன் கேளுங்கள்.

இதுவும்விகர்ணன்சொல் - விருத்தம்.

ஐந்துபேர்தமக்கோமான மனைவற்குபிலையாமானம்
இஞ்சொல்சேர்மனையாளைப தெல்லோர்க்குமுண்டுகண்டா
மின்னிகல்லருந்ததிக்கு மிகுந்தகற்புடையாள்தன்னை
கொஞ்சமாய்ச்சொல்லுமவார்த்தை!கேர்க்றவர்க்கடுத்திடாதே.

வ-ம், கேளுங்கள் மகாசபையோர்களே அந்தபாண்டவர்களைந் துபேருக்குந்தாரு மானம் இந்தமானம் அனைவர்க்குமில்லையா அவனவன் பெண்சாதியைவைத்து வாழ்கிறவனேயல்லாமல் வேறல்லவே அந்த அருந்ததிக்குசமானமான பதிவிரதையான திரௌபதையை இந்தராசசபையிலே வேசியென்றும்தாசியென்றும்பேசுகிறது ராசாக்களுக்கு தர்மமா நீதியா ஐயோ என்னபாவம்.

திரௌபதைசொல் - விருத்தம்.

தன்னியசபையிலுள்ள தொழும்பெரியோரேபோற்றி
என்னைமுன்தோற்றபின்பு எழிலவர்தோர்த்திட்டாரோ
மன்னவாமுன்னேதோர்த்து மற்றென்னைதோர்த்திட்டாரோ
என்னிலேநீங்கண்டீர்கள் ஞாயமாய்ப்பேசுவீரே.

வ-ம், கேளுங்கள்சபையிலுள்ள புண்ணியவான்களே பாண்டவர்கள் முன்னேதோர்த்து பிறகு என்னைதோர்த்தார்களா என்னைமுன்தோர்த்தபின் ஐந்துபேருந் தோர்த்தார்களா இதிலேகண்ணிற் கண்டதை நியாயமாய்ச்சொல்லவேணும் பெரியோர்களே.

விகர்ணன்சொல் - விருத்தம்.

நிலத்தினிற்குரியோனகொடிமுடியையவர்கேதனி
கலக்கமுற்றழுதுவிம்மி கதறியபுலம்பிக்கேட்டாள்

நலத்திலிப்பிறந்தநீதி ஞாயத்தைதெரிந்தநல்ல
குலத்திலிருந்தீர்களானால் கூசாமற்பேசிடீரோ.

வ-ர. இந்தகடல் சூழ்ந்த பூமிக்கெல்லாம் அதிபதியானபாண்டவர்களுக்கு அபிஷேகபத்தினியான துரௌபதியானவள் இந்தசபையில் முறையிட்டு அலறி விம்மி அழுத நியாயத்தைக்கேட்டால் நீங்கள் சத்தியம் தயைதாட்சண்ணியம் நியாயமுள்ளவர்களானாலும் நற்குலத்திற்பிறந்தவர்களானால் எதார்த்தத்தைப்பேசலாம் சபையோர்களே.

இதுவும் விகர்ணன் சொல்-விருத்தம்

நண்ணுறுங்கற்புடையாளிந்தகேடத்தைக்கேட்டாலெங்கள்
அண்ணன்தன்முகத்துக்கஞ்சி யதுநீதஞ்சொல்லப்போகீர்
மண்ணின்மேல்நின்றுபேணணிர் வழக்கோரஞ்சொல்லொணாது
கண்ணிற்கண்டதனைஎள்ளுக்காய்ப்பிளந்தாற்போற்சொல்வீர்.

வ-ம். அந்தமகாபதிவிரதையாகிய திரௌபதையைமுறையிட்டு இந்தசபையில்நடந்த காரியத்தை எதார்த்தமாய்சொல்லச்சொன்னாலெங்களண்ணன் துரியோதனமகாராசன் முகத்துக்கஞ்சி அசத்தியமாகச்சொல்லப்போகீர்கள் மண்ணின்மேல்நின்று வழக்கோரஞ்சொல்லலாகாது கண்ணிற்கண்டதைஎள்ளுக்காய் பிளந்தாற்போலசொல்லலாம் பெரியோர்களே.

சகுனி-விகர்ணனுக்குச்சொல்-விருத்தம்.

கிளைகெட்டவேநாற்றைக்கெடுக்கவந்தகுறுணியென்று
துரையுடனுலகந்தன்னிற் சொல்லுவாரதனைப்போல
விரல்மிகுநூறுபேரில் விஷத்தைப்போல்நீயொருத்தன்
குலைசெய்யப்பிறந்தபோதே குலமினிவிளங்குமப்பா

வ-ம். கேளாய் என்இளையமருமகனே விகர்ணனே நாற்றைக்கெடுக்கவந்தகுறுணியென்று உலகத்தில் சொல்லுவார்கள் அதுபோல நூறுபேரிலே நீயொருத்தன் இந்தகுலத்தைகெடுக்கப்பிறந்தாயானால் உங்களண்ணன்பேர் நன்றாய்விளங்கும்.

விகர்ணன்சொல் விருத்தம்.

பார்புகழ்தர்மராசன் படைக்கவெப்பொருளுந்தோற்று
சார்புதம்பியரைத்தோற்று தன்னையுந்தோற்றுவிட்டு
சேர்வுகொண்டொருவருக்கு தொண்டனாய்ப்போனபின்பு
தார்குழலிவளைத்தோற்கத் தகாதென்றுசொல்லொணாதோ.

வ-ம். கேளுங்கள் ராசாக்களே இந்ததிரௌபதையை என்னைத்தோற்றபிறகு ஐந்துபேர்களுந்தோற்றார்களா அல்லது ஐந்துபேருந்தோற்றபிறகு தன்னைத்தோற்றார்களா வென்றுகேட்டால் பேசாமலிருப்பதுஅக்ரமமா தருமராசனானவர் தனமாடு நகரங்களெல்லாமுன்னேதோற்றபிறகு தம்பிமாரையுந்தோற்றான் பின்பு தானுந்தோற்று அடிமையாய்ப்போனதொருவனுக்கு அடிமையாய்ப்போனவனிந்ததிரௌப

தையைவைத்து ஆடுகிறது தருமமல்ல துரோபதையைத் தோர்த்த தில்லைன்மையல்லவென்றுசொல்லுங்கள் சபையிலுள்ளபெரியோர்களே, விதுரன்சொல்விருத்தம்

நரைத்தென்னவயதுசென்று நாட்படவிருந்தாலென்ன
தரிததிடுஞ்சாஸ்திரங்கள் சதகோடிகற்றாலென்ன
பெருத்திடுஞ்சிறியோரேனும் புத்தியுள்ளவனேதக்கோன்
இந்தவிகர்ணன்வார்த்தை விகிதந்தான்மெய்யேமெய்யே.

வ-ம் நரைத்துப் போனதினாலென்ன நாட்பட யிருந்தாலென்ன அனேகசாஸ்திரங்கள் படித்தாலென்ன சிறுபிள்ளைகளானாலும்புத்தியுள்ளவனே பெரியவனித்த விகர்ணன்சொன்னவார்த்தை வேசரி நன்றாய்ச்சொன்னான்.

கர்ணன்-விகர்ணனுக்குச்சொல்-விருத்தம்

ஒஞ்சநீவழக்குச்சொல்ல உன்னையாரழைத்தாரிங்கே
செஞ்சொல்நீதிசாஸ்திரம் நீதானேகற்றுக்கொண்டாய்
கஞ்சிலேவடிக்கக்கற்றாய் கற்றுப்போல்பேசலுற்றாய்
பிஞ்சிலேபழுத்துப்போனாய் பேசாதேநீவிகர்ணா.

வ-ம். ஓய்தம்பிவிகர்ணா ஒருதலைவழக்குப் பேசவேண்டாம் உன்னையழைக்கவில்லை தரும சாஸ்திரமெல்லாம் நீதானா படித்துக்கொண்டாய் சபையிலுன்னைவிட பெரியவர்களில்லையா வடிக்ககஞ்சியிலே வடிக்கவும் கலலானைகற்றுபேசவும் பிஞ்சிலே பழுத்தவனை நீயொருத்தன் புறப்பட்டாய் பேசாமல்சும்மாயிரு விகர்ணா.

இதுவும்-கர்ணன்-சபையிலுள்ளவர்களுக்குச்சொல்-விருத்தம்.

தெரியாமல்சிறுவிகர்ணன் செப்பியவார்த்தைதன்னை
பெரியோரென்றுரைத்தீர்நல்ல பெரியோருங்களைப்போலுண்டோ
சரிதானிவழக்கிலுள்ள சங்கற்பந்தெரிந்திட்டீரோ
வரிவாகயிதோநான்கேட்கும் வார்த்தைக்குத்தாருஞ்சொல்வீர்

வ-ம் கேளுங்களே அறியாதபிள்ளை இந்தவிகர்ணன் வெகுஞாயத்தைசொன்னானென்று மெச்சிக்கொண்டபோதே இவனைவிட நீங்களயோக்கியந்தான் ஆ-ஆ இந்தவழக்கிலுள்ள சூட்சத்தைதெரிந்துக்கொண்டீர்களோ இதோநான் கேள்விக்கு உத்தரவு சொல்லுங்களபார்ப்போம்.

இதுவும்-கர்ணன் சொல்-விருத்தம்,

தனக்குள்ளபொருளுந்தம்பி மாரையுந்தனையுந்தோற்றான்
புனக்கினியிவர்படைத்த பொருளல்லால்வேறேயுண்டோ
குனிக்கவோர்மாத்தைநாடிக் குறித்தாடிகெலித்துக்கொண்டால்
கனக்கவேதழைபூபிஞ்சு காய்பழம்வேறோசொல்வீர்

வ-ம், கேளுங்கள் இச்சபையில்வந்திருக்கும்உரியவர்களாகியபெரியவர்களாகிய தனக்குள்ள பொருள்களெல்லாந்தோற்றுதம்பிமாரையுந்தோற்றப்போனபிந்த துரோபதையை அவர்களுக் குடன்பட்

முன்னே வாங்கிக்கொண்டு இப்போது எதிர்வழக்குப் பேசவந்தானே இவனைநிறுத்தி சேலையைஉரியடாதம்பி

விதுரன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்

பன்னியவிகர்னன்சொல்லைப் பழுதென்றதுரியாகேளாய்
என்னமோகெடுதிகால மிசைந்ததுவுங்களுக்கு
கன்னியைபங்கஞ்செய்யக் கருத்தினில்நினைத்தபோதே
மன்னுமுன்குடிக்குத்தீங்கு வந்ததுவந்ததப்பா

வ-ம் அடா துரியோதனா உனக்கு என்னமோ பொல்லாதகாலஞ் சம்பவித்தது அந்தமகாபத்தினியான துரோபதையை மானபங்கஞ் செய்யவேண்டுமென்று எப்போது நினைத்தாயோ அப்போதேஉன் குடிக்குஅனர்த்தகாலம்வந்தது சொன்னேன்-துரியோதனா

விதுரன்-கர்னனுக்குச்சொல்-விருத்தம்

தண்படுமுலகங்கார்க்குந் தார்மன்னரிடத்திருந்து
புண்படங்கோலைப்போலப் புகல்கின்றகர்னநீதான்
எண்படுநூல்கடோர்ந்து மிழிவழக்குரைக்கலுற்றாய்
பெண்பழிதேடிக்கொண்டோ பெரியவனாகப்போறாய்

வ-ம் கேளும்கர்னா தர்மசாஸ்திரமெல்லாம்பார்த்திருந்தும் ராசாக்களிடத்திலிருந்தும் புண்ணில்கோலிட்டாப்போல் இழிவழக்குப் பேசுகிறாய் பெண்ணைப்பார்த்தால்பேயுமிறங்குமென்பார்கள் அவ்வளவுமில்லாமல் ஒருபெண்பிள்ளைகள்பேரில் உன்பிரதாப மெல்லாங் காட்டுகிறாய் இதனாலேயா பெரியவனாகப்போகிறாய்.

கர்னன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்

பெரியோரைத்துணைக்கொள்ளென்று பேசினபடியேநீங்கள்
உரியோரென்றிங்கேசேர்ந்து வுதவியில்லாமற்போச்சு
பிரியவுட்சுவரிருக்கப் புறஞ்சுவர்பூசப்பட்ட
சரியானபெரியோர்நீதான் சபாசுநன்றாகச்சொன்னீர்

வ-ம் கேளும்விதுரமகாராசனே பெரியோரைத்துணைக்கொள்ளென்றல்லவோ வேதஞ்சொல்லுகிறது அப்படி நீங்கள் பெரியோர்களென்றும் உங்களைச்சேர்ந்ததற்கு ஒருஉதவியில்லாமற் போச்சுது அதிலேயும் உட்சுவரிருக்கப்புறஞ்சுவர் தீர்த்தப்பட்டீர்சரிதான்பெரியவர்தான்.

விதுரன்-கர்னனுக்குச்சொல்-விருத்தம்

பொய்சாட்சிசொன்னவருஞ்சபையிலொரு
தலைவழக்காய்புகன்றபேரும்
பைசாசமாநரகில்வீழ்வனென்று
நான்முறையைப்பறக்கடித்தாய்
மெய்சார்ந்தவிகர்னனையுமெடுத்தெறிந்தா
யளவிலாவிகாதஞ்சொன்னாய்

பொய்சாரும்வழக்குரைத்தாய்
துரியோதனனையுங்கெடுத்தாய்புகழோகர்ண

வ-ம் கேளும்கர்ணபொய்சாட்சிசொன்னவரும் சபையில்ஒருதலை வழக்காய்பேசினவனும் நரகத்தி லடைவார்களென்று சொல்லப்பட்ட கரு சாஸ்திரத்தைத் தள்ளிப்போட்டாய் இந்தவிகர்ணன்சொல்லும்வார்த்தையையும் எடுத்துப்போட்டாய் அந்ததுரியோதனன் புத்தியையுங்கெடுத்தாய் இப்படிப்பட்ட துர்நடைத்தையினாலேயா நல்லவனாகப்போகிறாய் கர்ண,

துரியோதனன்-விதுரனுக்குச்சொல்-விருத்தம்

நல்லதுசிற்றப்பாவுன் ஞாயத்தைநிறுத்தியையும்
எல்லையில்கர்ணன்சொல்லு மென்சொல்லுமுனக்கொவ்வாது
வல்லதுற்சாதனனேகேள் வடியவெம்புலிபோற்போற்றி
சொல்லுமிங்கிவளுடுத்துந் துகிலையுமுரிந்திடாயே

வ-ம் கேளும்சிற்றப்பா கர்னன்சொல்லும்என்சொல்லும்உன்செவிக்கேற்கபோகுதா உன்னுடையநியாயம் அங்கேயிருக்கட்டும்அடா துற்சாதனா இவளுடுத்தியிருக்குஞ்சேலையை உரியடாவென்று முன்னேதான்சொன்னேனே இன்னமுந்தாமிஷமா தம்பிதுற்சாதனா,

துற்சாதனன்-திரியோதிரனுக்குச்சொல்-விருத்தம்.

உரிந்திடுஞ்சேலையென்றே யுரைத்தவென்னண்ணாகேளீர்
பரிந்துநீசொல்லுமுன்னே பதைக்குதேயென்றன்கைகால்
தெரிந்திடசபையிலுள்ளோர் சிரித்திடவைவர்நெஞ்சம்
எரிந்திடவிவள்சேலை கடுகெனவுரிவேன்பாராய்

வ-ம். கேளும்என்னண்ணாவே நீசொல்லுகிறதற்குமுன் என்கைகாலும்பதைக்குது அப்படியேயுரிந்துபோடுகிறேன்பாரும்

துரோபதையை-துற்சாதனன்-மேடைமேல் இழுக்கிற
கண்ணிகள்.

பாங்காயென்னண்ணனைப்பார்த்து நகைத்தவள்
ஆங்காரமிப்போ அறிகிறேன்வாடி
தாங்காமலிந்தசபையிலே நீகேட்ட
தீர்க்காயவழக்கைநான் தீர்க்கிறேன்வாடி
வேணமட்டுஞ்சும்மாவீம்புபேசமுந்தன்
ஆணவமிங்கே அடக்கிறேன்வாடி
நாணயமாகவுன்னைசரிகமெல்லாம
காணவேபலர்க்கும் காட்டுகிறேன்வாடி

துரோபதை-மேடையின்மேல்-போகிறபோது
சொல்-விருத்தம்-முகாரி

பரியோரில்லையோபெண்களோயும் பெற்றோரில்லையோமானமுள்ள
உரியோரில்லையோவேந்தனுக்கின் கொருதிசில்லையோநீதிசொல்ல
அரியோரில்லையோவொருவருக்கு மருளில்லையோயானென்றுந்
தெரியாயேழையென்பங்கில் தெய்வமில்லையோதவித்தேயே

வசனம்.

அரி அரிவைகுந்தவாசா முகுந்தா அனபாயைக்காக்கும் கோவிந்தா மகாசபையில் மனுவிக்கியானந் தெரிந்த பெரியவாகளில்லையா என்போலும் பெண்களைப்பெற்றோரில்லையா மானபிமானமுடைய சுற்றத்தாரில்லையா நன்மை தீமையெனனும் நீதிமொழிகளைச் சொல்லும்படியான அறிவாளிகளில்லையா ஒருவருக்காவது அருளிரக்கமில்லையா ஏதுந்தெரியாத ஏழையானவள் உங்கில தெய்வமுமில்லையாவிதியே,

துற்சாதனன்சொல்-கண்ணி

தெய்வங்காணென்னசெய்யுமோபார்போமுன் காட்டாதே
இத்துகிலைத்தயிங்கே
சேலையுரிந்திந்தசபையிலேநானுன்னை விடுவேனோ
திகம்பரமாக்காமல்



திரௌபதை-ஸ்ரீகிருஷ்ணசாமியை-துதிசெய்திறபுலம்பல்

தரு-தெண்டா-ஆதிதாளம்-பல்லவி.

மாயவனே வைகுந்தவாசா எந்தன் மானங்காக்கவேணுஞ்சர்வேசா
ஆயநான்மறைதேடும் ஆதிமூலப்பொருளே
அபயமபயமுந்தன் உபயபாதமேகெதி அரி-மா

துற்சாதனன்சொல்-கண்ணி,

நேயமாக ஆதிமாய னென்றுஞ்சொன்னால்
நிலைநிற்குமோ மானமென்றெண்ணாதே-ஒரு
நிமிஷத்திலேயிந்த அரசற்குள்ளேயுன்னை
நிர்வாணமாக்குறேன் பாரடி-மாய

துரோபதைசொல்-தரு

சுருதிமெய்யருக்கெல்லா மெய்யா-என்னைக்
கைசோரவிட்டிடாதே ஐயா
விரிகடல்மேற் றுயில் துய்யா இந்த
வேளைகாத்தருளசெய்வாய் ஐயா அரி-மாய

துற்சாதனன்சொல்-கண்ணி

உரிந்தசேலையெல்லா முறிந்துகொண்டேனின்ன
மொருசுக்கிருக்குதுபாரடி இங்க
ஒருசுத்துபோனாலுன் பரிசுத்தமில்லாமின்
குடனேவெட்டவெளி யாமடி

துற்சாதனன்சொல்-விருத்தம்,

சேலைநாமுரிவோமென்று திருடிநீயறிவையோதான்
மூலையிலொருவுள்ளாடை முன்னமேயுடுத்திக்கொண்டாய்
வலநீயுடுத்தவாடை யிகனையுமுறிந்துகொண்டால்
நீவிகள்குருவேயப்பால் நீயென்னசெய்யப்போறாய்

வசனம்.

ஆஆ இதென்ன ஆச்சரியமடி இந்தசபையில்உன் துகிலை நாங்கள் உரிவோமென்று உனக்குத்தெரியுமா சேலைகளுள் ஒருசேலைகட்டிக்கொண்டாயே இதையும் உரிந்துப்போட்டா லின்னமொருசேலைநான் கொடுப்பேனென்று நினைத்தாயோ என்ன உன்புத்தி.

பீமன்-துரியோதனனுக்குச் சொல்-விருத்தம்.

மதித்துதிரௌபதையைத்தீண்டி வஸ்திரங்களையநாங்கள்
எதிர்த்தும்மைப்பொருளாஎண்ணி யிருப்பமோ துரியோதனனேகேள்
துதித்தவிகர்னன்போக தொண்ணூற்றொன்பதுபேர்தன்னை
வதைக்கிறேனெமபுரத்திற் சேர்க்கிறேனெழுந்துவாரீர்

வசனம்,

அடா துரியோதனா இந்தராசசபையிலே துரோபதையைநிறுத்தி வஸ்திரபங்கம்பண்ணும்படி நாங்கள் பார்த்திருப்போமா எங்களண்ணன்சொல்லுக்கு அடங்கியிருந்தோமேயல்லாமல் நீங்களெல்லாரும்ஒருபொருட்டா இப்பவும்இந்தவிகர்னன் ஒருத்தன்தவிர மற்றதொண்ணூற்றொன்பதுபேரையும் எமபுரத்துக்குஇப்போ அனுப்பிவைக்கிறேன் எழுந்திருந்துவாங்களடா,

தருமா-பீமனுக்குச்சொல்-விருத்தம்.

[illegible]றுத்தேனென்றுமறுக்காதே கருத்தேகையில்கதைகொண்டாய்
[illegible]ருத்தால்தெய்வமொண்ணுதோ பொருத்தாயின்னம் பொருவிமா

துரோபதைசொல்லல் முன் தரு

தேவாதிதேவனே யின்னேரம்-என்னைத்
திருக்கண்பார்த்தாலே யுபகாரம்
பூரவிசன்செய்த அபசாரம்பொறுத்துப்
புரிவாரட்சிப்பு துன்யாரம்

துற்சாதனன்சொல்-தரு.

பலபேருமெய்யென்று　　　மெச்சிக்கொள்ளவுந்தன்
　பத்தினிதனையிங்கே　　　காட்டாதேயிப்பேர்
பாரின்முன்சேலையை　　　யுரிந்துசபைதனிலே
　பவுஷைக்கெடுக்கிறேன்　　　பாரடி

திரௌபதைசொல்-முன்-தரு.

ஆனைமுறையிடவே　　　வந்தாய்-மடுவில்
　அன்றுமுதலையைப்　　　பிளந்தாய்
ஓதுங்கஜேந்திரனைப்　　　புறந்தாய்-இனி
　யுனையல்லாற்றிக்கில்லை　　　யெந்தாய் அரி-மாய

துற்சாதனன்சொல்-கண்ணி.

மானாதுகில்வர　　　மந்திரங்கற்றுயுன்
　மந்திரவித்தைக்குச்　　　சலிப்பேனோ-சும்மாய்
வளருந்துகிலெல்லாம்　　　வாங்கிவாங்கியுந்தன்
　மானங்குலைக்கிறேன்　　　பாரடி

துற்சாதனன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்

சித்திரமாயனந்தஞ் சேலைகளுதிக்குமாறல்
எத்தனைகோடியென்று யிழுத்துநானுரிவேனப்பா
உத்தவென்மாரபுந்தோளு முளைக்குந்தவுடல்கள்சோர்ந்து
இத்தனைகலைவந்தற்றிலென்செய்வேன் அண்ணேயண்ணே.

(வ-ம்) அடடாஅப்பா இதென்னகாரணமோ தெரியவில்லை அற்புதனிற்புதமாய் சித்திரவிச்சித்திரமாய் கோடிசூரியப்பிரகாசமானசேலைகள் விதவிதமாய் வாசாமகோசரமாய் புற்றிசலீசலானது பெரும்போக்குப் புறப்பட்டாற்போல் எத்தனைகோடி சேலையென்று நானுரிவேன் கையுஞ்சோர்ந்துபோகுது காலுமசைந்துபோகுது என்னாலாகாது அண்ணே

திரியோதனன்-துற்சாதனனுக்குச்சொல்-விருத்தம்

புலியொருபூனையாகப் போனாப்போலடடாதம்பி
பலர்களுநகைப்பதாகப் பயனில்லாவார்த்தைசொன்னாய்
உலவிலாக்கலைகளினை முண்டாகும்வித்தைபார்ப்போம்
வலியடாவுரியடாநீ மனமதுதளர்ந்திடாதே.

(வ-ம்) அடாதம்பி துற்சாதனா புலியைப்போலொத்தநீபூனையா யொடுங்கிவிட்டு எல்லோரும் நகைக்கும்படியாய் என்னாலே யாகாதென்று சொன்னாய் தயிரியம் விடாதே இன்னம் பார்ப்போம் உரியடாஉரி.

விகர்னன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

உரிஉரிநேர்நாழி யுழக்காழாக்கெனச்சொல்லாதே
தெரிதெரிதம்பிமாரும் நீயுமுன்குடியும்வாழ்வும்

வரிவரிவேற்கண்ணாளின் மனநெருப்பாலின்றோடே
சரிசரியென்றுசொல்லுஞ் சத்தியமில்லாவண்ணே.

(வ-ம்) கேளாய் அண்ணே உரிஉரி நாழிநாழி உழக்காழாக்கென்று சொல்லவேண்டாம் உன்னுடைய தம்பிமாரும் நீயும்உன் குடியும் உன்னுடைய செங்கோலும் உன்னுடையவாழ்வும் துரோபதைமான மென்னப்பட்டநெருப்பிலே சரிசரியென்று சொல்லண்ணே.

துரோபதை-முன்புலம்பல்தரு.

அடலிரணியனை விண் சேர்த்தாய் உந்தன்
அன்பில்பிரகலாதனைக் காத்தாய்
திடமானதேவர்கள் துயர் தீர்த்தாய்-இந்த
ஜெகங்களுய்யக்கிருபைக்கண் பார்த்தாய் அரி-மா

துற்சாதனன்சொல்-கண்ணி.

ஓலமிட்டேசும்மா யொழுகிப்போறாயுந்தன்
ஒழுங்கனுக்கும்பாயப் படுவேனோ-தை
ஓய்ந்துபோனாலுமெய்ச் சாய்ந்துபோனாலும்-நா
னைபங்கம்பண்ணாமல் விடுவேனோ

துரோபதைசொல்-கண்ணி.

நாராயணா அரி கோவிந்தா உன்னை
நம்பினேனையா கோவிந்தா
ஆரணனே அரிகோவிந்தா நானுன்
அடைக்கலமையா கோவிந்தா-அரிமாய

துற்சாதனன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

அறிவுள்ளவண்ணாவேகேள் யடவுடனேற்றம்போட்டு
மறிகடல்நீரையெல்லாம் மாளவேயிறைக்கிட்டாலும்
நெறியுள்ள இவள்படைத்த நெடுந்துகில்முழுதும்வாங்கி
எரிவதுகடினமையோ யினியென்னாலாகாதப்பா.

(வ-ம்) கேளாயண்ணே சத்தசமுத்திரத்தில் யேத்தம்போட்டு வற்றிப்போகும்படியாய் நீரையிறைக்கலாம் இவளுக்குண்டானவஸ்திரத்தை உரிதற்கினிமேல் என்னாலாகாது எங்களப்பன்தாமல்ல கல்லைக்கடிக்க.

பொது-விருத்தம்.

வனக்கிளிதுரோபதைக்கு மாளாமல்வளர்ந்தசேலை
தனித்தனியுரியுந்துற்சா தனன்கைகள்சலித்துநிற்க
குனித்தனில்விதுரன்வீஷ்மன் கோதிலாரியன்துரோணன்
இனித்தசொல்பெரியோரெல்லா மெழுந்தவருரைசெய்வாரே.

(வ-ம்) அதுகோகெட்டபடியென்றால் துரோணர்-வீஷ்மர் அஸ்வத்தாமர்விதுரன் இன்னும் சபையிலிருக்கப்பட்டபெரியோர்கள்சொல்லுகிறதைக்காண்க.

### சபையிலுள்ளோர்சொல்-விருத்தம்.

இவளேஐவருக்குந்தேவி யிவளேமற்றெவர்க்குமாதா
இவளேஇப்பூமிதேவி இவளேயக்கினிசொரூபி
இவளேசத்தியசிகாமணி யிவளேயுத்தமகுணாளி
இவளேயிக்குலத்துதெய்வமிவட்கிணையொருவருண்டோ.

(வ-ம) இவளேபஞ்சபாண்டவர்க்குமனைவிமற்றயாவர்களுக்கும் இவளேமாதா பூமிதேவியுமவளே அக்கினிசொரூபிஇவளே சத்தியவசனிஇவளே உத்தமகுணத்தைப் பெற்றவள் இந்தகுலத்துக் குலதெய்வம் இவளேயல்லாதுமற்றொருவரையும்இவளுக்கிணைசொல்லக்கூடாது தரும் தரும்.

### துரியோதனன்-துற்சாதனனுக்குச்சொல்-விருத்தம்

தாரதாரகெரிந்தோரெல்லாஞ் சந்தோஷப்படுவதாலும்
வாராதுகிலிவட்குச்சம்மாவளர்ந்துந்தயாகையாலும்
பொறாயிவள்செய்தகுற்றம் பொருத்தனனடாதம்பி
திரௌபதைதனையெடுத்துன் துடைமீதுவைத்திடாயே.

(வ-ம்) அடாதம்பிதுற்சாதனா இங்கேயிருக்கிற கிழவரெல்லாரும்அவள்மேலே சந்தோஷப்படுகிறபடியினாலே மாளாதுகில் இவளுக்குவளர்ந்தது ஆனபடியினாலே ஆனாலுமிவள் என்னகுற்றஞ்செய்திருந்தபோதிலும் பொறுத்துக்கொள்ளதானேனும்இல்லேயென்று வந்து என்தொடைமேலே உட்காருந்தால் பொறுத்துக்கொள்ளுகிறதற்கு சம்சயமில்லை நல்லது நீயாகிலும் எடுத்துவந்து என்தொடைமேலேஉட்காரவையடா தம்பி துற்சாதனா.

### விகர்னன் - துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

காவியமெதிர்வரும்யமனைத் தடுக்கலாகும்
தலைகொண்டபடவிஷத்தையிறக்கலாகும்
மேவுவடவாக்கினியையவிக்கலாகும்
மேல்வரும்பிரமாஸ்திரத்தைவிலக்கலாகும்
ஆவதும்கேள்கற்புடையோர்சபித்தால்தீர்க்க
ஆதிமும்மூர்த்திகளாலாகாதண்ணே
பாவையிவள்மகிமைதனைக்கண்ணிற்கண்டும்
பழிதேடிகொள்வதற்கே பதைக்கின்றாயே.

(வ-ம்) கேளும்அண்ணே கொல்லவருகிறஎமனை தடுக்கலாம்தலைக்கேரினவிஷத்தையுமிறக்கலாம் வடவாக்கினியையும் விலக்கலாம் மேலேவரும்பிரமாஸ்திரத்தையும்விலக்கலாம் கற்புடையஸ்திரீ

கள் மனம்கொக்து அவர்வாக்கினுலே ஒன்றைச்சொன்னால் அதை
த்தடுக்கமும்மூர்த்திகளாலுமாகாது இவள்மகிமையைக் கண்ணாலே
கண்டும்பழியைத் தேடிக்கொள்ளலாமோ அண்ணே.

திரௌபதைக்கும்-துரியோதனனுக்கும்-தர்க்கம்.

தரு-இ-ம்-காம்போதி-மிசுர்தாளம்.

ஒருமைத்தாணிபற்குள்பெருமைப்படவுதித்தாய்ப்பொவி இந்த
அருமைக்குருகுலத்தின் முறைமைதவிரவிட்டாயடாதோஷி யடி.

முறைமைத்தவிரவிட்டவர்கள் நித்தமுழுக்குமொருவேசி உன்
முறையிப்படியிருக்கசபைமெச்சவுநொடித்தாயடிதோஷி உந்தன்

மனதிற்பகையைவைத்துயிவிடந்தனிலழைத்தபபொவி நீ
வலியப்பகடைவைத்து அடிமைப்படகெலித்தாயடாதோஷி அடி.

அடிமைப்படகெலித்து அவர்கைப்பொருள்பறித்தறியாயோ நீஎன்
அடிமைப்படசிரிக்கிதுரைசொற்படிக்குநடக்கவருவாயே யெந்தன்

தருமத்துரைகளுக்குச்சதிசற்பனைநினைத்தபபொவி இந்தச்
சகுனிப்புலையனிட்டவினைசொற்படிமுடித்தாயடாதோஷி எந்தன்

சலவைத்தொடைமடிக்குள் சரசத்துடனிருக்கவருவாயே இந்தச்
சகுனிசொல்லைஎடுத்துகடலுக்கப்புரமெட்டிஎறிவேனே நானுன்

கொடையிற்றனிஇருக்கச்சபையிற்பழுதுறைத்தபொவி உந்தன்
தொடையிற்கழுகுகொத்த வெளியப்புழுபுழுத்து மடியாயோ



தலையைப்படுகளத்திலுருக்கணைகள்பட்டுடன் னுயிர்போயும்உன்னை
தழுவிக்கொள்ளநினைத்துமனதெப்படிமறக்கும்மறவேனே
ஒன்னைத்தழுவிக்கொள்ளநினைத்தமடியில்தனையழைக்கப்பெறவி •
என்றன்தருமதுரைகள்கைக்குளடிபட்டலறியெப்போவிழுவானோ
உன்னை சபையில் துகிலவிழ்த்தலையைக்குனியவைத்ததினாலின்று
என்னைசபதத்துடனழைத்துப் புகழ்பெற்ற. ஜெயிப்பாரடிபோடி
என்னை சபையிற்றனிநிறுத்தித் துகிலைக்களையவிட்டபடுபாவி
உந்தன் தலையைக்கனைதரிக்க முடிபெற்றிடுஞ்சமர்த்தரிவர்நமன்று
இந்தச் சவலைப்பசுகளுக்கு மினிமற்றொருவருக்குமசைகேளன்று
நீங்கள் இடியற்றுவொருமிக்கக் கொடியபடுகளத்திலமடியாமல்
மண்மேலனையச்சுருளவிழ்த்தமயிரைக்கையாலெடுத்து முடிவேனோ

திரௌபதைசொல்-விருத்தம்-இ-ம்-முகாரி.

கொலுவினில்நிறுத்தியெந்தன் கூந்தலுந்துகிலுந்தீண்டி
மெலியச்செயவனைநானே வேருடன்போர்க்களத்தில
தலைதனைத்துணிந்துவெட்டி தனிமுரசரைந்திடாமல்
இலகவேவிரித்தகூந்த லெடுத்தினிமுடித்திலேனே

வசனம்

கேளுங்கள் சபையிலுள்ளராசாக்களே என்னை இந்த இராஜசபையிலேநிறுத்தி என்கூந்தலையுந் துகிலையுந்தீண்டி என்னை அவமானபங்கஞ்செய்தவனை நாளை இரணகளத்தில் அவன் மார்பின்மேலிருந்து மயிரைமுடிக்காவிட்டால் நான்துரோபதையல்ல

வீமன்சொல்-விருத்தம்

மங்கைதிரௌபதையையிந்த மகாசபையினில்நிறுத்தி
பங்கமாய்ப்பழுதுசொன்ன பாதகர்தம்மையிந்தச்
செங்கையிற்கதையினாலே சின்னபின்னங்களாகச்
சங்கரித்திடுவேன்சொன்ன சபதமுடிப்பேன்பாரீர்,

வசனம்.

கேளுங்கள் சபையிலுள்ளவர்களே துரோபதையைச் சபையிலேநிறுத்தி மானபங்கஞ்செய்துவைத்தபேரை என்கையிலிருக்கும் கதையினாலே அடித்துக்கொன்று நான்சொன்ன சபதத்தைமுடிக்கிறேன் ராசாக்களே.

இதுவும்-பீமன்சொல்-ஆசிரியவிருத்தம்.

மதித்ததிரௌபதையை மயிர்பிடித்திழுத்து
வஸ்திரமுரிந்தவன் தன்னைச்
சமைத்தவனுதிரமள்ளியுண்டென து
தாகந்தீராமல நானினிமேல்
சதித்தவென்கையால புனலெடுத்துண்ணேன்
கதையினாற்ஜலத்தினையடித்துக்
குதித்துமேலெழுந்ததிவலையையுண்டு
கொண்டவன்பகையை முடித்திடுவேன்

வசனம்

கேளுங்கள்ராஜாக்களே மந்திரிகளே துரோபதையை மயிரைத்தொட்டிழுத்துவந்து வஸ்திரபங்கம் பண்ணினவனெவனோ அவனைநெஞ்சைப்பிளந்து அவனுடையஉதிரத்தை என்கையினாலேயள்ளிக்குடித்து என்னுடைய கோபமென்னப்பட்ட தாபந்தீர்க்காமல் இனிமேல் என்கையினாலேஜலத்தை யள்ளி தாகபானம்பண்ணேன் சலம்சாப்பிடவேணுமானா லிந்தகதையினால் சலத்தையடித்தாமேலெழுந்த சலத்தை சாப்பிடுவேனேயல்லாமல் என்கையினாலள்ளிச்சாப்பிடுகிறதில்லை.

அருச்சுனன் சொல்-விருத்தம்.

படுதுரியோதனன்சொற் பழுதுபோகாமலேந்தி
விடுவிடென்றுரைக்குமிந்த விரோதியாங்கர்னன்றன்னை
கொடுகணையாலேபாவி துள்ளவேபிடித்துநாளைப்
படுகளஞ்சேர்க்காவிட்டால் பார்த்திபனானுமேவனோ

வசனம்.

கேளுங்கள்ராசாக்களே இந்ததுரியோதனன்சொல்லைக்கீழே விடாமலெடுத்துக்கொண்டு இச்சகம்பேசுகிற இந்தக் கர்னனுயிரை என்னுடைய அஸ்திரங்களுக்கிரைகொடாவிட்டா லென்பேர் அருச்சுனனு நல்லது ஆகட்டும்.

நகுலன்சொல்-விருத்தம்.

சலதிலஞ்சனைக்கும்பொல்லா கபடகதமனகன்போல்
தவறுகள்மிகவேசெய்யுந் தவுபலநாதன்றன்னை
அவமதித்தமர்க்களத்தி லேதாகெடிபாக்கிவெற்றி
நவில்நிடச்செய்யாவிட்டால் நகுலனானுருவேனோ

வசனம்

கேளுங்கள் ராசாக்களே மகாகபடக தமனக வித்தைகளாலே மித்துரோகஞ்செய்யப்பட்ட சவபலநாயகனை ரணமுகத்திலே சங்காரம்பண்ணுமற்போனால் நான்நகுலனு நல்லதாகட்டும்

சகாதேவன்சொல்-விருத்தம்.

புதுநரிகுருக்கள்போலும் புருஷர்வசிகளைப்போலும்
வெகுபகைமனதில்வைத்து மித்ரபேதங்கள்செய்து
மகுடமன்னரைக்கலைத்து மாரீசன்செய்யுமிந்த
சகுனியைக்கொல்லாவிட்டால சகாதேவனனேனே

வசனம்.

கேளுங்கள்ராசாக்களே நரி குருக்களென்றுஞ் சொல்லுவார் களை அவர்களைப்போலவும் புருஷர்வசிகளைப்போலவும் சதிசர்ப்ப னை சாமத்துரோகம மித்திரபேதமெல்லாஞ்செய்து சமஸ்தானசபை யைக்கலைக்கப்பட்ட இந்தசகுனியைசித்திரவதைசெய்துக்கொல்லா விட்டால் நானசகாதேவனுபாருங்கள்.

பொது-விருத்தம்.

தருமபுத்திரனில்லாமல் தம்பிமாரநான்குபேரும்
அரிவைதுரோபதையுஞ்சொன்ன அடல்பெருசபதங்கேட்டு
மருவியபெரியோரெல்லாம் மனமிகக்கலங்கும்போது
குருகுலக்கொடியோனான குருடனுங்கூறுவானே

கட்டியக்காரன்சொல்-வசனம்

அகோகாதெப்படியென்றால் தர்மபுத்திரமகாராஜன் தவிர மற்ற தம்பிமார்நால்வரும் துரோபதையுஞ்சொன்ன சபதங்களைக்கேட்டு சபையிலுள்ளபெரியோர்களும் இராஜாக்களும்மனதில்விசனமடை ந்திருக்குங்கருணத்தில் திருதராட்டிர மகாராசன் திரௌபதைக்குச் சொல்லுகிறவிதங்காண்க.

திருதராட்டிரன்சொல்-விருத்தம்.

கற்பிலுங்கமலைசெதெய்வ கடாட்சமுள்ளவளேபோற்றி
மற்பெருமைவர்சிந்தை மகிழ்குலக்கொடியேபோற்றி
பொற்புறுமாதர்க்குள்ளே பொறுமையுள்ளவளேபோற்றி
அபுக்கிருவெயிந்த அபசாரம்பொறுப்பாய்போற்றி

வசனம்.

அம்மா துரௌபதையே நீயென்தாயாச்சுதே எங்களைரட்சிக்க வந்ததெய்வமாச்சுதே அப்படியா இப்படிப்பட்டவளா நீவேண்டா மென்றுசொன்னேனே என்பேச்சை இந்தப்பசங்கள் கேட்கிறார்க ளா உன்மகிமை இந்தப்பசங்களுக்கும் எனக்கும் தெரியவந்ததுநா ங்களென்ன அபசாரஞ்செய்தாலும் பொறுத்துக்கொள்ளவேணும் தாயே.

திரௌபதை-திருதராட்டிரனுக்குச்சொல்-விருத்தம்

ஒருமைகள்பலவும்பேசி யுலகெலாங்குருகுகின்ற
அருமையென்மாமாவுந்த னரவிந்தபாதம்போற்றி
வருமனுங்கியன்றி மற்றுமக்கடிமையான
தருமமூர்த்திகளைக்கொண்டு தவிழ்ந்துநீர்விடுவீரே

வ-ம் கேளும் என்மாமா கேட்டதைக் கொடுக்கிறேனென்று சொன்னபடியினாலே நீங்கள்சூதாடி அடிமைபடுத்திக்கொண்ட அந்த தர்மமூர்த்திகளை அடிமைத்தனத்தைமீட்டுக்கொடுக்கவேணும்மாமா

திருதராட்டிரன்சொல்-வசனம்

அப்படியே கொடுத்தேன் அம்மா

இதுவும்-திருதராட்டிரன்சொல்-கவி

கனியெனும்நிறம்போல் இனியசொற்கேளாய்
மனைதினில்வருந்தா தினியொருவரங்கேள்

வ-ம் கேளுமம்மா துரோபதையே இன்னமொரு வரங்கேள் கொடுக்கிறேன்.

திரௌபதைசொல்-விருத்தம்

நூல்வரும்நீதியாய்ந்து நுண்ணியகேள்விக்கட்டி
மால்வரும்புகழைப்பெற்ற மாமாகேளொருவிண்ணப்பம்
அனைவரும்வெற்றிபெற்ற வாயிதத்துடனே மற்ற
நால்வர்தன்னடிமைநீக்கி நயமுடன்தந்திட்டாயே

வ-ம் கேளும் மாமாவே இன்னம்வேண்டியதைக்கேட்கச்சொன்னபடியினாலே மற்றநாலுபேரையும் ஆயுதத்துடனே அடிமைத்தனத்தை நீக்கிவிடவேணுமம்மா.

திருதராட்டிரன்சொல்-வசனம்

அப்படியேகொடுத்தேன் இன்னமொருவரங்கேளம்மா

திரௌபதைசொல்-வசனம்.

கேளும் மாமாவே ஸ்திரீசாதிகள் வரம்பெற்றால் பிராமணஸ்திரீகள் ஒருவரமும் க்ஷத்திரியஸ்திரீகள் இரண்டுவரமும் வைசியஸ்திரீகள் மூன்றுவரமும் பெறலாமேயல்லாமல் அதற்குமேலும் பெறலாகாதே மாமாவே.

திருதராட்டிரன்-வசனம்-அப்படியே அம்மா

திருதராட்டிரன்சொல்-விருத்தம்

தேடக்கிடையாமைந்தர்களே நீதாஞ்சூதில்நீர்தோற்ற
நாடுகொடுத்தேன்நகர்கொடுத்தேன் நாலுவிதச்சேனைகள்கொடுத்தே

விடுகொடுத்தேனென்பொருளுவிளங்கக்கொடுத்தேன் கைக்கொண்டு
விடுபடைத்துமுன்போலும் பொருந்துவாழ்வீரே

வ-ம் கேளுங்கள் பெருமையுள்ள என்கட்டிமக்களே நீங்கள் ஆயாசப்படவேண்டாம் அந்தப்பிள்ளைகள் வேறல்ல நீங்கள் வேறல்ல இப்போது நீங்கள்சொக்கட்டாடி தோற்றநாடுநகரம் இரதகஜ துரகபதாதி சதுரங்கசேனைகளெல்லாம் கொடுத்துவிட்டேன் நீங்கள் எப்போதும்போல இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டுசுகமாயிருங்களப்பா.

## தருமர்-திருதராட்டிரனுக்குச்சொல்-விருத்தம்

அப்படிதானேசெய்வோ மையனேநின்றாள்போற்றி
பெட்புறுமுலகந்தன்னிற் பிதாவாக்கியந்தள்ளுவாரோ
எப்படிநீர்சொன்னாலும் பரமதைத்தடுப்பதில்லை
மெய்ப்புடன்விடைகொடுத்தால் மேனகர்க்கேகுவோமே

வ-ம்-கேளும்பிதாவே உலகத்திலே பிதாவாக்கியந்தள்ளுவார்களா நீரெப்படிசொன்னாலும் அப்படியேகேட்போம் செலவுகொடுத்தனுப்பினால் இந்திரப்பிரஸ்தம் போய்ச்சேருகிறோமையா

## சகுனிசொல்-விருத்தம்.

பகையெலாம்போச்சேசகரன்றான் பட்டதுவிணாப்போச்சே
வகையெலாம்போச்சேயுங்கள் வைரங்கள்விடுபோச்சே
சுகமுடனவரும்நீரும் துஜங்கட்டிவாழ்ந்திருங்கள்
தருமிதுநன்றாய்ச்செய்தீர் சபாசுன்னைமெச்சினேனே

வ-ம் இன்றோடே இந்த பகையும்போச்சுது இருக்கட்டும் எப்படியாகிலும்நீங்களும் அவர்களும் ஒருமித்துச் சுகமாயிருந்தால்சரி கேடுவருமென்று சொல்லுவார்களே அப்படியிருக்குது அடாபோங்கள் வேலைமெனக்கிட்டதாசிரிகளா-ஆ-ஆ-ஆ.

## கர்ணன்சொல்-விருத்தம்.

மதிப்புடன்தன்னைத்தேடி வந்திடும்செல்வந்தன்னை
உதைத்துமேதள்ளிவிட்ட ஆமக்கெண்ணமக்கிதென்ன
பிதைப்பைகளென்றுசொல்லி பேச்சென்றுநின்றுபோச்சே
விதைப்படுசகுனிமாமா விடுவிடுபோவேண்டாம்

வ-ம் கேளும்சகுனிமாமாவேணுமென்று தனக்குத்தானேயத்தசெல்வத்தைவேண்டாமென்றுதைத்துத்தள்ளிவிட்டால்போது

டமக்கும் நமக்கும் என்னமுழுப்போச்சுது துரியோதனன்பங்காளியென்கிற பட்டமாத்திரம்வந்தது இதனாலேநீரேன் பேசுகிறீர்சும்மாயிரும்.

துரியோதனன்- துற்சாதனனுக்குச்சொல்-விருத்தம்

துற்சாதனனேயோடா துருக்காயோர்கொடியிற்சென்று
பொய்சார்ந்தவைவர்தன்னைப் போகாமலடக்கிக்கொண்டு
பிச்சானகிழவன்பேச்சைப் பெரிதென்றுநம்பிப்போக
உச்சாயமல்லவென்று வுடனேபோய்த்தடுத்துவாடா

வ-ம் அடாதம்பி துற்சாதனா இங்கேவாடா நீ சீக்கிரமயோடி தர்மபுத்திரர்களை போகவொட்டாமல்மடக்கிக்கொண்டுவா கணணில்லாத பயித்தியக்காரக் கிழவன் பேச்சை நம்பிப்போகிறது காரியமல்லவென்று அதற்குண்டான பேச்சுகளெல்லாம் பேசி அவர்களை இந்திரப்பிரஸ்தத்துக்குப் போகவொட்டாமல் இங்கே இட்டுக்கொண்டுவாடா தம்பி துற்சாதனா.

துற்சாதனன்சொல்-வசனம்.

அப்படியேசெய்கிறேன் அண்ணாவே

துற்சாதனன்-பாண்டவர்களுக்குச்சொல்-விருத்தம்

ஐயரேகேளீருங்க ளறிவென்னவாண்மையென்ன
மெய்வரும்படியாய்தோற்றீர் விழியிலாக்கிழவன்பேச்சை
கைவருமபடியாயெண்ணிக் கடிநகரலதாளப்போனீர்
பொய்வரும்புகழும்போகும் பொறியிலாநெறிசெய்தீரே

வ-ம் பாண்டவர்கள் நீங்கள்சத்தியமாய் சபையில் ஆடித்தோற்ற நாடுநகரமுதலானதைநான்கொடுத்தேன் போய் விடுங்கள் என்றுமுன்பின்தோன்றாக் கிழவனசொன்னான் அதைகேட்டுக்கொண்டு நீங்கள்போகலாமா இதுதருமமா இதுவரையிலும் சத்தியமாயிருந்து இப்போது அசத்தியத்தைக்கொண்டாபோகிறது வாருங்கள்.

தர்மர்சொல்-வசனம்.

அப்படியேவருகிறோம் தம்பிதுற்சாதனா

தர்மர்-சபையில்வந்துசொல்லுகிற-விருத்தம்.

இதாவிதந்தெரிந்துசொல்லு மிறைவரேசொல்லக்கேளீர்
பிதாசொன்னவார்த்தையெல்லாம் பித்தராமென்று
சுதானிலைனந்துசொன்னான் தோற்றதுற்சாதனன்றான்
சாதகிலுமொருமார்க்கத்தை யின்னதென்றுரைசெய்வீரே

வ-ம் ஐயா துரோணரே பீஷ்மரே நாங்கள் சொக்கட்டானடித் தோற்ற நாடுநகருந்தல் மறுபடியும் உங்களுக்குக் கொடுத்துவிட்டே னென்று என்பிதாவான திருதராட்டிரமகாராசன் சொல்லி விடை கொடுத்தனுப்பியிருக்க அதுதகாதென்று துற்சாதனன் தடுக்கிறான் அதைத்தெரிந்து சொல்லுங்களையா.

துரியோதனன்-பாண்டவர்களுக்குச்சொல்விருத்தம்

சொல்லுவதென்னமுன்பின் தோன்றாதகிழவன்பேச்சைக்
கல்லின்மேலெழுத்தென்றெண்ணிக் கடித்துலகாளப்பாரீர்
நல்லதுதானுமிது நியாயமாயினிமேலுங்கள்
வல்லபங்கட்டிவைத்து வனத்திலுக்கேகுவீரே

வ-ம் என்னத்தைக்காணும் இங்கேசொல்லுகிறது பிரமாணிக்கமாய் சூதாடி எப்போதோர்ததீர்களோ அன்றேபோச்சுது எங்கள்தகப்பன் பெரியமனிதனுச்சுதே கண்ணில்லாக்கிழவன் ஏதொன்றுந்தோற்றமல் ஒன்றைச்சொன்னால் அதைச்சிலாசுஸியமாய்ப்பிடித்துக்கொண்டுபோக எத்தனப்பட்டீர்கள் அதுகூடாது இந்தட்சணத்திலே நீங்கள்காட்டுக்குப்போய் விடுகிறதேதீர்மானம்,

துரோணர்-தருமருக்குச்சொல்-விருத்தம்.

பகடையிற்தோற்றதெல்லாம் பரிந்தவர்தந்திட்டாலும்
இகழ்வதுகொள்ளலாகா திராஜருக்கியற்கையன்றே
நகும்படிமுன்பின்னிந்தத் தரணியையாளுமன்னர்
புகும்நெறிப்படியேசென்றால் புரவலர்வாழ்க்கையாமே

வ-ம் கேளும் தர்மராசனே எப்போ சூதாடி தோற்றுபோனதைக்கொடுத்துவிட்டேனென்று அவர்கள்சொன்னாலும் நீங்கள் அதைக் கைக்கொள்ளுகிறது யோக்கியமல்ல முன்பின் இராசாக்கள் போனவழிப்படியே போகவேணும் தர்மராசனே

அஸ்வத்தாமர்-தாமருக்குச்சொல்-விருத்தம்

தர்மபுத்திரனேயுங்கள் தம்பிமார்நாலுபேரும்
சபதமிட்டிருக்குமந்தத் தன்மையைமறந்திட்டாயோ
மருவுளமுன்செல்வமெல்லா மறுபடிகிடைக்குங்கண்டாய்
ஒருவர்தன்மருளுமற்ற ஒருவர்தன்பகையாகாதே

வ-ம் கேளுந்தர்மராசனேயுங்கள்தம்பிமார் நாலுபேருமிட்டசபதம்பொய்த்துப்போமோ அந்தபடியேமுடியும்எப்படியும் நாடுநகரமுதலானதுகள்உங்களுக்குகிடைக்கும் திருதராட்டிரனுடைய அன்பும்துரியோதனனபகையும்பெற்றுபோனதிலேகாரியமென்ன

பீஷ்மர்-தருமருக்குச்சொல்-விருத்தம்.

அரிவுடனயோத்தியாண்ட வரிச்சந்திரராசன்செல்வம்
பரிகொடுத்தாப்பாரப்பிள்ளை பததினிதன்னைவிற்று
விரல்விட்டுத்தானுங்கூட விலைபட்டுமீண்டுவந்து
கரையராவுலகமெல்லாங் கைக்கொண்டதறிகிலாயோ.

வ-ம். கேளுந் தர்மராசனே மகாசக்கிரவர்த்தியான அரிச்சந்திரன் நாடுநகரமெல்லாம் விஸ்வாமித்திரனுக்குக் கொடுத்துவிட்டுப் பிள்ளையைவிற்றுப் பெண்சாதியைவிற்று தானும்விலையாகிப் படாத் துன்பங்களைப்பட்டு மறுபடியும் உலகத்தையாளவில்லையா இதைக் கேட்டதில்லையா தர்மராசனே.

விதுரன்-தர்மருக்குச்சொல்-விருத்தம்.

நளச்சக்கிரவர்த்திசூதால் நாடெல்லாமிழந்துகானில்
உளமகிழ்ந்துழன்றுகொண்டா யொண்டொடியாளைநீக்கி
வளமிகுமங்கங்குன்றி வலியதேர்ப்பாகனாகிக்
களதுயர்நீக்கிதெய்வங் காத்ததுமறிந்திலாயோ.

வ-ம். கேளுந்தர்மராசனே நளச்சக்கிரவர்த்தி நாடுநகரமிழந்து வனத்திலேசஞ்சரித்து பெண்சாதியைநீக்கித் தேர்ப்பாகனாகியும்மறுபடியும் இந்தப்பூச்சக்கரமெல்லாம் ஏகமாய்ப்பெற்றிருக்கவில்லையா இதுவுங்கேட்டதில்லையா தர்மராசனே.

துரோணர்-தர்மருக்குச்சொல்-விருத்தம்.

ஆகையால்நீருமித்த வரிவைதுரோபதையுங்கூடி
பாகமாய்வனத்துக்கேகிப் பனிரெண்டுவருஷந்தங்கி
ஓர்கையோர்வருடங்காட்டி லொருவர்க்குந்தெரியாவண்ணம்
வாருடன்மறைந்திருந்து வந்துபின்னுலகையாள்வீர்.

வ-ம். கேளுந்தர்மராசனே நீங்களைந்துபேரும் இந்தத்துரோபதையுங் காட்டுக்குப்போய் பன்னிரண்டுவருடம் வனவாசம்பண்ணி ஒருவருடம் ஆருக்குந்தெரியாமல் காட்டிலே மறைந்திருந்து வந்தீர்களானால் மறுபடியும் உங்கள் நாடுநகரமெல்லாம்பெற்றுசுகமாயிருக்கலாந் தர்மராசனே.

### இதுவும்-துரோணர்சொல்-விருத்தம்.

மறைந்திருக்கின்றநாளில் மற்றொருவர்கள்கண்டால்
நெறியினில்நீங்கள்சென்று நேர்வனஞ்சஞ்சரித்து
இறைமறுபடியுங்காட்டுக் கேகுவதென்றுரிந்த
குறைவறலந்தாலுங்கள் குவலயங்கைக்கொள்வீரே.

வ-ம். கேளும் என்னருமையான பிள்ளைகளே பன்னிரண்டுவருடம்வனவாசம் ஒருவருடம் அக்கியாதவாசமுமிருந்து மறுபடியும் இந்த அக்கியாதவாசத்திலே உங்களையாராகிலும் இன்னாரென்று தெரிந்துக்கொண்டால் மறுபடியும் பதின்மூன்றுவருஷம் இப்படிக்குச்சஞ்சரிக்கின்றதென்று இருக்கிறது சமஸ்தானத்தின்கருத்து அப்படியே இந்தப்படிக்கு வனம்போய்வந்தால் உங்கள்செல்வத்தைப் பெற்றுக்கொள்ளலாந் தர்மராசனே.

### துரோபதைசொல்-விருத்தம்-முகாரி.

துரையிதுவென்றுசொன்ன துரோணரேநின்றுள்போற்றி
அறைதருமிவர்களைவர் ராசர்களாவதென்றுந்
திறமுடனிவர்களுக்குத் தேவிநானாவதென்றும்
முறையறவினியொருக்காற் கொடியசூதாடவேண்டும்.

வ-ம். ஐயா துரோணரே நீங்கள்சொன்னதுசரியே ஆனாலும் இந்த ஐந்துபேரும் அடிமையென்றும் அவர்களுக்குட்பட்டபொருள் நானென்றும் அவர்கள்சொல்லச்சே அந்த வில்லங்கதனை வைத்துக்கொண்டு வனத்துக்குப்போகிறபோது யோக்கியமல்ல இனியொருதரஞ் சூதாடவேண்டும் ஐயரே.

### தர்மர்சொல்-விருத்தம்.

மெய்யிதுநல்லவார்த்தை விதிதந்தானவர்க்குநாங்கள்
கையுறுமடிமையாகிக் காட்டுக்குப்போனால்நாளை
வையகமடிமைப்பட்ட மனிதர்க்கிங்கேதென்பர்மேற்
துய்யனேயினிமேலோராட்டஞ் சூதாடவேணுமையா.

வ-ம். கேளுமையா துரோணரே துரோபதைசொல்லுகிறதுமெய்யே அடிமைத்தனத்தோடே வனம்போய்வந்தால் நாளை அடிமைபட்டவர்களுக்குப் பூமியேதென்று சொல்லுவார்கள் அந்த அடி

மைத்தனத்தை இப்போது தீர்த்துக்கொள்ளுகிறது நல்லது ஆகை யாலே இன்னுமொருதரஞ் சொக்கட்டாடவேண்டுமையா.

விதுரன்-துரியோதனனுக்குச்சொல்-விருத்தம்.

சரிசரியிதற்குவேறே தடங்கலைச்சொல்லொணாது
துரியனேசகுனிகர்ண துற்சாதனனேசளீர்கள்
தருமருஞ்சகுனிதானுந் தனித்தனியெதிரிருந்து
பரிவுடனினியோராட்டம் பகடையாயாடச்செய்வீர்.

வ-ம். கேளுந்துரியோதன-கர்ண-துற்சாதன தர்மராசன் சொல் லுகின்றது சரியே ஆகையினாலே முன்போல் தருமராசனுஞ்சகுனி யும் இன்னமொரு ஆட்டஞ்சொக்கட்டான் போட்டுப்பார்ப்போம.

சகுனிசொல்-விருத்தம்.

நாட்டையுங்கொடுத்துஉள்ள நகரையுங்கொடுத்துச்சேர்ந்த
வீட்டையுங்கொடுத்துச்சும்மா வெறுங்கையைகட்டிகொண்டு
காட்டுக்குப்போறபோக்கும் கைப்பொருளதனைக்கண்டு
ஆட்டத்தையாடச்சொன்னீ ரதற்கொருவயணஞ்சொல்வீர்.

வ-ம். நாடுநகரம் ரொக்கரோசனை ஆனைசேனை முதலானதுகளெ ல்லாந்தோற்றுக் கையைதட்டிக்கொண்டு காட்டுக்குப்போகிறவே ர்களுடனே சூது ஆடச்சொல்லி குதித்தீர்களே அவர்கள்கையில் என்னயிருக்குது என்னபந்தயம் வைத்தாடுவார்கள் கேளுங்கள்.

தருமர்-சகுனிக்குச்சொல்-விருத்தம்.

நான்தோற்றுலெந்தன்புண்ணியம் நல்குவேனல்லாயல்நீர்
தான்தோற்றுலெங்கள்தொண்டு தவிர்வதுயிதைக்குறித்து
தேன்தோற்றகையாலிங்கே திறல்மன்னர்பார்ப்பதாக
வான்தோற்றகையாலிங்கே வலியசூதாடுவோமே.

வ-ம். கேளுஞ்சகுனிமாமா நான்தோற்றுல் நான்செய்தபுண்ணி யமெல்லாங் குடுத்துவிடுகிறேன் நீர்தோற்றீருனல்எங்களுக்கு அடி மைத்தனமக்கரையில்லை இந்தப்படியே யாடுவோம் வாரும் மாமா.

சகுனிசொல்-வசனம்.

அப்படியே யாடுவோம்வாருந் தருமராசனே,







தருமரும் ஜகுனியும்

## ஐந்தாவது ஆட்டம்.

தருமர்சொல்-தரு-காம்போதி-மிசுரதாளம்.

தாமோதராவாசுதேவா கோவிந்தா
தற்காத்தருள்முகுந்தா வைகுந்தா

வசனம்-இரண்டுபன்னிரண்டு-பத்து.

சகுனிசொல்-தரு.

இன்னமுஞ்சூதாடவந்தீரோ வாரும்
இனியாகிலுமென்கைதிராணியைப் பாரும்

வசனம்-மூணத்தொண்ணு.

தர்மர்சொல்-தரு.

நாராயணுவச்சுதா பத்மநாபா
நம்பினேனுன்னையேமெய்யா ஞானசொருபா

வ-ம். இரண்டுபனிரண்டு இரண்டெட்டு இரணடரிக்கால இரண்டுதுகை பத்து.

சகுனிசொல்-தரு.

அனைத்துந்தோற்றீரே சற்றுமெண்ணுகா
அனைத்துடனேனும் போகவொண்ணுதா

வசனம்-காலத்தோஞ்சு.

தர்மர்சொல்-தரு.

உண்டமெல்லாம்வாரி யுண்டசெவ்வாயா
உதரிக்கவேணு மூராக்ஷசஹாயா

வ-ம். நாலுபன்னிரண்டு-நாவிரிக்காலெட்டு-துகை-நாலுமூன்னேழு:

சகுனிசொல்-தரு.

விபரீதபந்தயம் விழுந்ததுவும்போச்சே
விழுவதெல்லாம்அஞ்சு மூணத்தொண்ணூச்சே

வசனம்-மூணத்தொண்ணூ.

தருமர்சொல்-தரு.

தரணியெல்லா மளந்தபொற்பாதா
தட்சகனேயாதி லட்சுமிசமேதா

வ-ம். இரண்டுதுகை நான் கிரிக்கால் எட்டுபன்னிரண்டு ஆறெண்ணேழு.

சகுனிசொல்-தரு.

ஆட்டத்திலெல்லாங் கொடுத்துச்சலித்தான்
அடிமைத்தனம்போக இப்போஜெயித்தான்

வசனம்-நாலுமூன்னேழு.

பீஷ்மர்-துரோணர்-அசுவத்தாமர்-விதுரன்
இவர்கள்சொல்லுகிற-விருத்தம்.

கொண்டவென்றவர்சொல்லால் சூதாடித்தீர்த்துவிட்டீர்
விண்டிடுமடிமையான வில்லங்கமினிமேலில்லை
பண்டுரைசெய்யுமிந்தப் பதின்மூன் றுவருஷஞ்சென்றூர்
கொண்டிடுநாடும்வாழ்வும் கொள்ளுவீர்சொல்லுவீரே.

வ-ம். கேளுங்கள் பாண்டவர்களே அம்மாதுரௌபதையே அடிமையென்றவார்த்தையை அவர்கள்சொல்லாமல் அந்தவில்லங்கத்தைத்தீர்த்துவிட்டீர்கள் இனிமேல்நீங்கள் ஆரணியத்துக்குப்போய்பன்னிரண்டுவருஷம்வனவாசமும் ஒருவருஷம் அக்ஞாதவாசமுமிருந்துவந்தால் மறுபடியும் யெப்போதும்போல உங்களுடைய இராச்சியமெல்லாம்பெற்றுக்கொள்வீர்.

தருமர்-சபையோர்களுக்குச்சொல்-விருத்தம்.

அருள்பெருத்துரோணராதி ஐயரேபாட்டனாரே
மருவுசிற்றப்பாஉங்கள் மலர்ப்பதம்போற்றிபோற்றி
கருதியபெரியோருங்கள் கடாட்சம்வைத்தருளவேணும்
விரவியவனத்துக்கேக விடையதுதருகுவீரே.

வ-ம். ஐயாதுரோணரே அஸ்வத்தாமரே வீஷ்மரே பாட்டனாரே எங்கள்குருக்கள்மாரே சிற்றப்பராகிய விதுரமகாராசனே உங்களெல்லாருக்கும் சரணம்சரணம் உங்கள்திருக்கடாட்சமிருக்கவேண்டும்நாங்கள் வனத்திற்குப்போய் வருகிறோம் செலவுகொடுங்கள் பெரியோர்களே.

பீஷ்மர் - துரோணர் - அஸ்வத்தாமர்

இவர்கள்சொல்-விருத்தம்.

மதிகடல்வற்றினாலும் மகமேருதூறினாலும்
அறைகரும்புவியாழ்ந்தாலு மண்டலங்களிடிந்திட்டாலும்
குறைவிலாமக்களுங்கட் கொருதீங்குவருவதில்லை
துறைவனஞ்சென்று மீண்டு சுகமுடன்வருகுவீரே.

வசனம்.

மகாசத்தியவந்தரான பாண்டவர்களே இந்தச் சத்தசாகரங்கள்வற்றிப்போனாலும் மகம்மேருவுக்கு ஒருசஞ்சலம்வந்தாலும்பூமியானது ஆழ்ந்திப்போனாலும் பிரம்மாண்டதடாகங்கள் இடிந்துபோனாலும் உங்களுக்கு ஒருதுன்பமும்வருகிறதில்லைசுகமாய்ப்போய்வாருங்கள் மைந்தர்களே.

தருமர்சொல்-வசனம்.

அப்படியே போய்வருகிறோம் பெரியோர்களே.

பாண்டவர்கள்-காட்டுக்குப்போகிற-தரு,

இ-ம்-தோடி-தாளம்-மீசுரம்.

பல்லவி.

வனத்திற்பன்னிரண்டுவருஷஞ் சஞ்சரிப்போம்
வாருந்தம்பிமாரே

அநுபல்லவி.

தொனித்தசகுனிமாமன் சுழலினி லகப்பட்டோம்
துரைத்தனமும்நாடும் சூதிற்றோற்றுவிட்டோம்-வன

சரணங்கள்.

எம்மாலேயாதொன்று ஆகுமோ-மாயன்
எழுதினதுந்தப்பிப் போகுமோ
தம்மாலொன்றுமில்லை யெவர்களுக்கானாலும்
தாழ்வுசிலதுகாலம் வாழ்வுஞ்சிலதுகாலம்-வன
பங்கம்பங்காளியாய்ப் பிறந்தோமே-இந்தப்
பாரெல்லாம்விட்டுத் துறந்தோமே
கொங்கலர்மாலைமகுட மன்னவருக்கும்
குறையுஞ்சிலதுகாலம் நிறையுஞ்சிலதுகாலம்-வன

மன்னவர்க்கிதமெத்த தொல்லையோ-இந்த
வருத்தப்பட்டபேர்க ளில்லையோ
இன்னமின்னங்துயரென் றுவ தென்மதி
என்றைக்குமாயனிரண்டு பாதமேகெதி-வண

விருத்தம்-இ-ம்-முகாரி.

வரிசையாய்பாண்டவாளும் வனத்தினிற்சென் றுதானும்
அரியதோர்பன்னிரண்டாம் அக்ஞியாதவாசஞ்செய்த
துரியனுதிகளைக்கொன்று துரோபதைசமேதராக
மருவியதர்மராசன் மகுடாபிஷேகங்கொண்டார்.

ஆசிரியவிருத்தம்.

தாளதங்கமதிகலையிற்சூடித்
தற்பரனுமசெவ்வந்திநாதர்வாழி
மாளாததுரோபதையின்கற்புக்காக
மலரடியில்மாதர்பூதேவிமாரும்வாழி
மீளாதகற்கமுற்றதுரியனோனை
மெய்கலங்கப்போர்களத்தில்வென்றுவாழி
நீளாதஇயரகற்றிபஞ்சவர்க்கு
நிகரில்லாவரசளித்தநெடுமால்வாழி
கார்வாழிகதிர்மறையினுடுக்கள்வாழி
கற்புடையதுரோபதையாள்கணவரைந்து
பேர்வாழிபெரியோர்கள்தானும்வாழி
பேசிடும்சாஸ்திரங்களிறம்பெருகவாழி
ஊர்வாழிஅஸ்தினபுரியும்வாழி
உண்மைநெறியுடையபாண்டவரும்வாழி
ஊர்வாழிஊரினுள்ளோர்வாழி
ஏர்வாழிபாகவதர்கள்தானும்வாழி.

## ஸ்ரீ மகாபாரதவிலாசம்.

## சூது - துகிலுரிதல்

முற்றிற்று.

---

